பிள்ளையார்பட்டி

# பிள்ளையார்



## கற்பக விநாயகர் எனப்படும்

## தேசி விநாயகப் பிள்ளையார்

ஆசிரியர் :

கலைமணி தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

# பதிப்புரை

முதற்பதிப்பு : 1956

இரண்டாம் பதிப்பு : 2000



***விலை : Rs.20.***

***அச்சும் வடிவமைப்பும் :***

**மாணவர் மறுதோன்றி அச்சகம்**
9, சுங்குராம தெரு, பாரிமுனை
சென்னை – 600 001
போன் – 5382513.

சிவமயம்

# அணிந்துரை

சமய உலகிலும் சாத்திர உலகிலும் ஈடு இணை இன்றி ஆட்சி செய்யும் பிள்ளையாரைப் பற்றிக் கற்றோரேயன்றி மற்றோரும் படித்து எளிதில் புரிந்து கொள்ளும் முறையில் ஒரு சிறு நூல் எழுதி வெளியிடவேண்டுமென்பது என் நெடுநாளைய எண்ணம். இந்த எண்ணந்தான் இன்று இந்த நூலை உருவாக்கி இருக்கிறது.

இந்நூலை ஆக்கித்தந்த **திரு.தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்** அவர்கள் இதனை நல்ல பாகுபாடுகள் செய்து பிள்ளையாரின் பல வடிவங்கள், பிறப்பு, நோன்பு, வழிபாட்டின் பயன் முதலியவற்றைத் தெளிவாக உரைத்திருக்கிறார்கள். பிள்ளையாரைப்பற்றி வழங்கும் கதைகளையும், இலக்கியங்களில் இவர் இடம் பெற்றுள்ளதையும் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்கள். பிள்ளையாரின் பிறப்பைப் பற்றி 'அவதாரம்'என்ற தலைப்பில் ஆசிரியர் சொல்லும் விளக்கம் அறிந்து உணரத் தக்கதாகும்.

பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் சந்நிதியில் மேற்கொள்ளும் சதுர்த்தி விரத மகிமையை எல்லோரும் உணர வேண்டுமென்பது என் அவா. இதிலும் பெண்கள் இந்த விரதம் மேற்கொண்டு அவர்கள் விரும்பும் பிள்ளைப்பேறு முதலிய எல்லா நலன்களும் பெறுவது விளக்கமாகவே கூறப்பட்டிருக்கிறது நூலில். என் மகள் **திருநிறை செல்வி மீனாட்சிக்கு** இவ்வாண்டு சதுர்த்திக்குள் ஆண் மகவு பிறக்க வேண்டும் என்று நான் பிள்ளையாரை நித்தமும் வழிபட்டு வந்தேன். என் மகளும் இந்த வருஷம் விரதம் மேற்கொண்டிருந்தாள். நான் பிரார்த்தித்தபடி, விரத பூர்த்தி செய்யும் இவ்வாண்டு ஆவணி சுக்லபக்ஷ சதுர்த்திக்குள், என் மகள் ஆண் மகவை பெற்றெடுத்தாள். இது **கற்பக விநாயகர்** வழிபாட்டின் பயன்தான் என நான் உறுதியாக நம்புகிறேன்.

பிள்ளையார் வழிபாட்டின் மணிமகுடமாய் விளங்கும் இச்சதுர்த்தி விரதத்தைப் பிள்ளையார்பட்டியில் செட்டிநாட்டுப் பெண்கள் 300 முதல் 500 பேர்வரை ஆண்டுதோறும் மேற்கொண்டு வருகிறார்கள். ஒரு நாளைக்கு 24 மணி என்பதுபோல ஓர் ஆண்டுக்கு 24 சதுர்த்திகள் உண்டு. உடலோடு, உள்ளக் கட்டுப்பாட்டையும் ஒரு வரையறையையும் நல்குவது இந்நோன்பு.

ஒன்பது மணிகளுக்கு நிகராய் ஒன்பது கோயில்கள் செட்டிநாட்டில் உள்ளன. அவற்றில், பூசை முறை, சிப்பந்திகள் படித்தரம், சட்டதிட்டம் இவற்றில் சிறந்து விளங்குவது, பிள்ளையார்பட்டிக் கோயில். இதனைக் கண்ணை இமையிரண்டும் காப்பதுபோல் வண்ணமுறக் காத்துவரும் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார்க்கு என் நன்றியும் வணக்கமும் உரியதாகும். சென்ற ஆண்டு எங்கள் குடும்பத்தார்க்கு இக்கோவில் பணிகளை மேற்பார்க்கும் நற்பேறு வாய்த்தது குறித்துப் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

`துங்கக் கரிமுகத்துத் தூமணி'யைப்பற்றி எழுதவேண்டும் என்று **திரு.தொண்டைமான்** அவர்களைக் கேட்டுக்கொண்டேன். அவர்களும் உடனே இசைந்து ஒரு வாரத்திற்குள் இந்நூலை உருவாக்கி அளித்தார்கள் பிள்ளையார்பால் அவர்கள் கொண்டுள்ள பக்தியும் பற்றுமே இதற்குக் காரணம். அவர்களுக்கு என் நன்றி உரியதாகும். அவர்களுக்கு நீண்ட ஆயுளையும், மக்கட் பேற்றையும் மற்றும் சகல செல்வத்தையும் அருள கற்பக விநாயகரைப் பிரார்த்திக்கின்றேன்.

இப்பிள்ளையாரை வழிபட்டார் `நாடிய பொருள் கைகூடும், ஞானமும் புகழும் உண்டாம்' என்பது என் கருத்து. பக்திநெறி தலைப்பட்டோர்க்கு இச்சிறு நூல் பயனளித்தல் உறுதி. சமய உலகம் இந்நூலுக்கு வரவேற்பளித்து வாழ்த்தும் என நம்புகிறேன்.

கோவை

8.9.56.

**பழ.கண்ணப்ப செட்டியார்**

# முன்னுரை

எங்கள் திருநெல்வேலியில் ஒரு விரதம். வசனம் இருப்பது என்று. அதாவது செந்தில் ஆண்டவன் சந்நிதியில் ஒரு மண்டலம் - நாற்பது நாள் கோயிலில் தங்கியிருந்து அங்கு கிடைக்கும் உணவையே உண்டு, தவம் கிடப்பதுதான். இதனால் தீராத வியாதிகள் தீரும் என்பது நம்பிக்கை. இரண்டு வருஷத்திற்கு முன்பு நான் திருச்செந்தூர் சென்றிருந்தபோது இப்படி வசனம் இருப்பவர்கள் ஒரு சிலரைக் கண்டேன். எனக்கும் ஒரு ஆசை. தீராத வியாதிக்காக அல்ல என்றாலும், `தீராத வினைகளைத் தீர்த்தருள வல்லவன்' சந்நிதியிலே, இப்படி ஒரு விரதம் இருக்கலாமே என்று. உண்ணும் உணவில் ஒரு கட்டுப்பாடு ; அத்துடன் பேசும் பேச்சிலேயும் ஒரு நிதானம். ஆம். மௌன விரதமே அனுஷ்டிக்கலாமே என்று எண்ணினேன். இந்த ஆசை உள்ளத்தில் உருவாகிக் கொண்டிருந்தபோது, சகோதரர் **திரு.சா.கணேசன்** அவர்களுடன் ஒருநாள் **பிள்ளையார்பட்டிக்குச்** சென்றேன். கோயில், குளம், மூர்த்தி எல்லாம் எனக்கு ஒர் இன்ப உணர்ச்சியைக் கொடுத்தன. என் உபாசனாமூர்த்தி பிள்ளையார் ஆனதினாலே, பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் சந்நிதியிலேயே மௌன விரதம் அனுஷ்டிக்க விரும்பினேன், சென்ற வருஷம், நாளும் கிழமையும் ஒத்து வரவில்லை. என்றாலும் சென்ற மே மாதம் ஐந்து தினங்கள் அங்கு தங்கினேன் :மௌன விரதம் அனுஷ்டித்தேன். விநாயகர் அகவலைப் பாடி ஆரம்பித்த விரதத்தை விநாயகர் அகவலைப் பாடியே பூர்த்தி செய்தேன். `இந்த விரதத்தை இனி வரும் வருஷங்களிலும் அனுஷ்டிக்க வேண்டும் ; அதற்கு இறை அருள் கூட்டுவிக்க வேண்டும்' என்பதே இன்று என் பிரார்த்தனை.

இப்படி ஒர் ஈடுபாடு, எனக்குப் பிள்ளையார்பட்டி பிள்ளையாரிடத்திலே. இதைத் தெரிந்த நண்பர் **திரு.பழ.கண்ணப்ப செட்டியார்** அவர்கள் `பிள்ளையாரைப் பற்றி ஒரு சிறு நூல், பெண்களும் பிள்ளைகளும் படித்து அனுபவிக்கும் அளவிலே எழுத வேண்டும்', என்றார்கள். அவர்கள் இட்ட பணியை ஆசையோடும் ஆர்வத்தோடும் நிறைவேற்ற முயன்றிருக்கிறேன், ஆற்றல் இல்லாவிட்டாலும் கூட. இந்தப் பணியில் என்னை ஈடுபடுத்திய நண்பருக்கு நன்றி.

பிள்ளையார்பட்டிப் பிள்ளையாருக்கு என் வணக்கம்.

கோவை

*8.9.56* **தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்**

# முகவுரை

பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் என்ற இந்தச் சிறு நூலை ஆக்கித் தந்துள்ளவர், எங்கள் தந்தையார் திரு.தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். தொண்டைமான் அவர்களைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. தமிழ் கூறும் நல்லுலகம், அதிலும் ஆன்மிக உலகம், அவரை நன்கு அறியும். அரசுப் பணியிலிருந்த போதும், பணியிலிருந்து ஓய்வு பெற்ற போதும், தமிழ் நாட்டுக் கோயில்களைப் பற்றியும் தமிழ் நாட்டுக்கு வடக்கே உள்ள கோயில்களைப் பற்றியும், தொண்டைமான் அவர்கள் எழுதி வெளியிட்டுள்ள வேங்கடம் முதல் குமரிவரை என்ற கட்டுரைத் தொகுப்புக்களும், வேங்கடத்துக்கு அப்பால் என்ற கட்டுரைத் தொகுப்பும், இன்றும் நல்ல வரவேற்பைப் பெற்றிருக்கின்றன. பிள்ளையார்பட்டி பிள்ளையார் என்ற இந்த நூல், 1956 ஆண்டு,எழுதப்பட்டதாகும். இந்த நூலை எழுதுவதற்குத் தூண்டுகோலாக இருந்து, அவர்களை இந்தப் பணியில் ஈடுபடுத்தியவர்கள் இருவர். திரு.பழ.கண்ணப்ப செட்டியார் அவர்களும், கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்களும் தாம், இந்த நூல் உருவாவதற்குக் காரணமாக இருந்தவர்கள். கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்களே, பிள்ளையார் பட்டித் தல வரலாறு என்று ஓர் அருமையான ஆராய்ச்சி நூலை எழுதியிருக்கிறார்கள். தொண்டைமான் அவர்கள் எழுதியுள்ள இந்த நூலுக்கு, மறுபதிப்பு வரவேண்டும் என்று அன்பர் பலர் விரும்பினார்கள். மகாப் பெரியவர், பரமாச்சார்யார், அவ்வையார் ஆக்கித் தந்துள்ள விநாயகர் அகவலுக்கு எழுதியிருக்கும் முன்னுரையையும், விநாயகர் அகவலையும், பிள்ளையாரைப் பற்றி அறிஞர் பலரின் துதிப்பாக்களையும் இந்த நூலுக்குப் பிற்சேர்க்கையாக இணைத்-திருக்கிறோம். இந்தப் பதிப்பு வெளிவருவதில் மிகுந்த ஆர்வம் காட்டியவர் அருள்மிகு திருச்செந்தூர், சுப்பிரமணிய சுவாமி கோயில் அறங்காவலரும், அன்புச் சகோதரருமான திரு.பா.இரா.சண்முகம் அவர்கள். 1998ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஆரம்பிக்கப்பட்ட திரு.தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் அறக்கட்டளையின் மூலம் இந்த நூல் வெளியிடப்படுவது மிகுந்த மகிழ்ச்சியையும், பெருமிதத்தையும் அளிக்கிறது. இந்த நூலை, இத்தனை அழகாகவும் அருமையாகவும் அச்சிட்டு வழங்கியருப்பது மாணவர் நகலகம். அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகிறது. வேழ முகத்து விநாயகனின் அருள் அனைவருக்கும் கிட்டவேண்டும் என்று வாழ்த்தி, இந்த நூலை, தமிழ் மக்கள் முன் படைக்கிறோம்.

நன்றி. வணக்கம்.

**ராஜேஸ்வரி நடராஜன்**
**சரோஜினி சுப்பிரமணியம்**

பாஸ்கர நிலையம்,
*10, 7வது குறுக்குத்தெரு,*
*சாஸ்திரி நகர், சென்னை - 20.*
*01.01.2000*

# சமர்ப்பணம்

மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே

-தாயுமானவர்

எங்கள் தந்தையார்

திரு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்களை

பிள்ளையார் பட்டிப் பிள்ளையாரிடம் ஆற்றுப்படுத்தியவரும்

தொண்டைமான் அவர்களின் உடன்பிறவா சகோதரருமான

**கம்பன் அடிப் பொடி, திரு.சா.கணேசன்** அவர்களுக்கு

இந்த நூலை காணிக்கையாக்குகிறோம். -

# ஓம்

*

திருவும், குலமும், எழில் நலனும்
திகழ்நற் குணனும், சிறப்பு எவையும்,
மருவு மகளிர் மன்றலும், நன்
மக்கட் பேறும், வளர்கல்விப்
பொருளும், தெருளும், மெய்ஞ்ஞானப்
பொலிவும் மருதங் கூர்வாழ்
கற்பகப் பேர் அண்ணல் கழல்
வணங்க நியமம் வழங்கிடுமே

**- சொக்கலிங்க ஐயா**

இந்த நூல் உருவாவதற்கு நிதி உதவி செய்து, ஊக்கப்படுத்திய
**ICMC Corporation Ltd., Industrial and Agrochemicals (Try) P. Ltd.,** நிறுவனத்தாருக்கு கலைமணி
திரு.தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் அறக்கட்டளை
நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

## வித்தக விநாயகர்

கைலாயத்தில் ஒரு நாள், அன்னை பார்வதியும் அத்தன் பரமேஸ்வரனும் ஓரிடதில் அமர்ந்திருக்கிறார்கள். இருவருக்கும் இடையில் உட்கார்ந்திருக்கிறார் மூத்த பிள்ளை விநாயகர். பிள்ளையை மிக்க வாஞ்சையுடன் அணைத்துத் தாயும் தந்தையும் மாறி மாறி முத்தமிட்டு மகிழ்கிறார்கள். இந்த நிலையில் இந்தக் குறும்புக்காரப் பிள்ளை ஒரு வேடிக்கை பண்ண நினைக்கிறார். அன்னையும் அத்தனும் முத்தமிட விரும்பிய நேரத்திலே தன்னுடைய முகத்தைக் கொஞ்சம் பின்னால் இழுத்துக் கொள்கிறர். அவ்வளவுதான், அன்னையும் அத்தனுமே முத்தமிட்டுக் கொள்கிறார்கள், ஒருவரை ஒருவர். இதைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிக்கிறார் இந்தப் பிள்ளையார். இப்படி ஒரு கற்பனை, ஒரு கவிஞனுக்கு.

> மும்மைப் புவனம் முழுதீன்ற
> முதல்வியோடும், விடைப்பாகன்
> `அம்மை! தருக முத்தம்' என
> அழைப்ப, ஆங்கே சிறிதகன்று
> தம்மின் முத்தம் கொள நோக்கி
> சற்றே நகைக்கும் வேழமுகன்

என்ற காப்புக் கூறுகிறான் கவிஞன், தான் எழுதிய சிறு காப்பியமாம் நந்திக் கலம்பகத்தில்.

இந்தப் பிள்ளை, தன் தாய் தந்தையர்களையே சிரிக்க வைக்கிறது ஒரு தடவை. ஆனால் இந்தப்பிள்ளையை சிரிக்க அடித்து விடுகிறார்கள், சின்னஞ் சிறிய ஊரில் உள்ள செல்வச் சிறுமியர் சிலர். சிறு வீடு கட்டி விளையாடுகிறார்கள் சிறுமியர்கள். அங்கு மண்ணாலேயே சோறு, மண்ணாலேயே கறி எல்லாம் ஆக்குகிறார்கள். இந்த இடத்திற்கு வருகிறார் பிள்ளையார், தன் தொந்தி வயிற்றைத் தள்ளிக் கொண்டு. இதைக் கண்டு சின்னப் பெண்கள் சிரிக்கிறார்கள் `கலகல' என்று. பிள்ளையாருக்குப் கோபம் வருகிறது. உடனே அவர்கள் கையால் இழைத்த சிற்றிலை இவர் காலால் அழிக்க முற்படுகிறார். அந்தக் கூட்டத்தில் ஒரு சிறு பெண் - குறும்புக்காரப் பிள்ளையாருக்கு ஏற்ற குறும்புக்காரப் பெண்தான் - முன் வந்து பிள்ளையாரிடம் சொல்கிறாள், `பிள்ளையாரே! பிள்ளையாரே! உமக்கு ஏன் எங்கள் மேல் இத்தனை கோபம். சிறு வீடு கட்டி சோறு எல்லாம் ஆக்கி வைத்த பின், கூட இருந்து சாப்பிடு.

வதற்கு ஆள் இல்லையே என்று நாங்கள் வருந்திக் கொண்டிருந்தபோது, விருந்தினராகத் தாங்கள் வந்தீர்கள். அதனால் எங்களுக்கு ஒரே மகிழ்ச்சி. அதனால்தான் அப்படிச் சிரித்து உம்மை வரவேற்றோமே அல்லாமல், உம்முடைய யானை முகத்தையும், தொந்தி வயிற்றையும், குட்டைக் காலால் நீர் நடந்து வரும் அழகையும் கண்டு கேலி பண்ணிச் சிரிக்கவே இல்லையே! என்று பேசுகிறாள்.

கோபமாக இருக்கும் பிள்ளையாரைச் சமாதானப்படுத்தும் பாவனையில், அவர்கள் உண்மையிலே எதற்காகச் சிரித்தார்கள் என்பதையும் நல்ல நகைச் சுவையோடு, சொல்லாமல் சொல்லிவிடுகிறாள் இந்தப் பெண். இதைச் சொல்கிறது ஒரு பாட்டு

விருந்து விளிப்போம்
எனக்கருதும் வேளை
அடிகேள், இவண் நீயே
விரும்பி வந்தாய்
என மகிழ்ச்சி மீக்கூர்தலினால்
செவ்வாயின்
முருந்து தோன்ற
முறுவலித்தேம் அல்லால்
ஒருநின் கரிமுகம் போல்முகமும்,
பூதப் பெரு வயிறும்,
முடங்கும் குறள்தாள்
நகு நடையும்
இருந்தவாறு நோக்கி
நகைத்திட்டேம் அல்லேம்.

என்று அழகாகப் பாடுகிறார் கவிஞர். இப்படி எல்லாம் மற்றவர்களை ஹாஸ்யத்திற்கு உள்ளாக்கி, தானுமே அந்த ஹாஸ்யத்திற்கு உட்பட்டு இருக்கும் பிள்ளையாரை **வித்தக விநாயகர்** என்று கூறாமல் வேறு என்ன பெயரிட்டு அழைப்பது? வித்தகர் என்றால் ஞானவான், சாமர்த்தியசாலி, அதிசய புருஷர் என்று தானே பொருள்.

ஆனால், இதே வித்தக விநாயகர் மற்றொரு தடவை இப்படித் தன்னுருவைக் கண்டு நகையாடிய சந்திரனை மிகவும் கடுமையாகவே தண்டித்திருக்கிறார். கதை இதுதான்.

ஒரு நாள் விநாயகர், தேவர்கள் எல்லாம் கண்டு களிக்க கைலாயத்திலே நர்த்தனம் செய்திருக்கிறார். சரிந்த தொந்தி. மோதகம் ஏந்திய கை. குறுகிய கால்கள் இவைகளுடன் ஆடிய விநாயகரது நடனத்தைக் கண்டு, சந்திரன் சிரித்திருக்கிறான். ஆம். யாருக்குத்தான் விநாயகர் அல்லது விநாயகரைப் போன்ற உருவம் படைத்தவர்கள் நடனம் ஆடுவதைக் கண்டால் சிரிக்காமலிருக்க முடியும்? ஒன்று, சந்திரன் சிரிப்பை அடக்கியிருக்கவேண்டும் ; இல்லை முன்னர் கூறிய சின்னஞ் சிறுமியைப்போல அப்படிச் சிரித்ததற்கு ஒரு பொய்யையாவது கற்பனை பண்ணிச் சொல்லத் தெரிந்திருக்க வேண்டும். இரண்டும் செய்யவில்லை ; வாய் விட்டே சிரித்துவிட்டான் அவன். அவ்வளவுதான், கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது விநாயகருக்கு. அதனால் `பிடி சாபம்' என்று கோபமாக சந்திரனைச் சபித்தேவிட்டார். சாபமோ, அன்று முதல் சந்திரன் உருவை ஒருவருமே பார்க்கமாட்டார்கள் ; கண்டவரும் நிந்தை செய்து ஒதுக்கி விடுவார்கள் : அத்தகைய நீசனாக அவன் ஆகட்டும் என்பதுதான். பூரண கலை பொருந்திய உருவம்கொண்ட சந்திரனோ, அன்று முதல் கலை இழந்து, தேய்ந்து தேய்ந்து மெலிந்தான். கண்டவரும் வெறுத்து ஒதுக்கினார். வெட்கத்தால் உருவம் குன்றிய சந்திரன், பிரமனிடம் சென்று முறையிட்டான். `சாபமிட்டவர் தான் சாப விமோசனத்தையும் அருளவேண்டும்' என்று சொல்லி சந்திரனை விநாயகரிடத்தில் கூட்டிச் சென்றார் பிரமன். சந்திரனும் விநாயகர் திருவடியில் விழுந்து வணங்கி, `தெரியாது செய்த பிழையை மன்னித்தருள' வேண்டினான். பிரம்மாவும் அவனுக்காகப் பரிந்து பேசினார். `தவறு செய்ததற்கு தண்டனை செய்ய வேண்டியதுதான் ; ஆனால் அது நிரந்தர தண்டனையாக இருக்க வேண்டாமே ; வருஷத்தில் ஒரு சில நாட்கள் மட்டுமே அந்தத் தண்டனையை அவன் அனுபவிக்குமாறு அருள் புரியலாமே' என்றார் பிரமன். விநாயகரும் மனம் இரங்கி `சுக்ல சதுர்த்தியில் உன்னைக் காண்பவர்கள் எல்லாம் வீண் அபவாதம் அடையட்டும், ஆனால் ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில், என்னைப் பூஜித்தால் அந்த அபவாதம் நீங்கட்டும்' என்று சாபத்தை மாற்றி அருளினார். இது காரணமாகத்தான் வளர்பிறை சதுர்த்தியன்று, இன்றும் மக்கள் சந்திரனைப் பார்க்காது ஒதுக்கிறார்கள். அப்படித் தப்பித் தவறிப் பார்ப்பவர்களும், ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் விரதம் அனுஷ்டித்து விநாயகரை வணங்கி, சாப விமோசனம் பெறுகின்றனர்.

இப்படித்தான் **சதுர்த்தி விரதம்** அன்று முதல்அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது என்று கூறுகின்றன புராணங்கள். அதிலும், இந்த விரதம் பெண்கள் அனுஷ்டிக்க வேண்டிய முக்கிய விரதம் என்றும் சொல்கிறது. காரணம் : இந்த உலகத்தில் ஆண்களை விடப் பெண்கள்தானே, காரணமே இல்லாமல் வீண் அபவாதத்திற்கு உள்ளாகிறார்கள். ஆதலால் அவர்கள் மேல் ஏற்படும் வீண் அபவாதங்கள் நீங்கவும், அவர்கள் மிகவும் விரும்பும் பிள்ளைப்பேறு முதலிய எண்ணங்கள் சித்தி பெறவும், சித்தி விநாயகரை அவர் விரும்பிய சதுர்த்தி அன்று விர்தம் அனுஷ்டித்து வணங்குதல் வேண்டும். வருஷம் முழுவதும் இருபத்திநான்கு சதுர்த்தியிலும் விரதம் அனுஷ்டிப்பதோடு ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் விரத பூர்த்தி செய்து விநாயகரைத் தொழுதால் பெறுதற்கரிய பேறுகளையெல்லாம் பெறலாம் என்பதுதான் மக்கள் நம்பிக்கை.

ராமநாதபுரம் ஜில்லாவில் குன்றக்குடியை அடுத்த பிள்ளையார்பட்டியில் பிள்ளையாருக்கு உகந்த சதுர்த்தி விரதம் எல்லோராலும், சிறப்பாக பெண்களாலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. வருஷம் முழுவதும் - ஆம் - இருபத்திநான்கு சதுர்த்தி திதியிலும், விரதம் அனுஷ்டித்தவர்கள் எல்லாம், வருஷக்கடைசியில், ஆவணி மாதம் சுக்லபக்ஷ சதுர்த்தியன்று விரத பூர்த்தி செய்கிறார்கள். அன்று பிள்ளையார்பட்டி பிள்ளையார் சந்நிதியில் - வருஷம் முழுவதும் விரதம். அனுஷ்டித்த பெண்கள் ஒன்று கூடுகிறார்கள். விரத பூர்த்தி செய்ய வந்திருக்கும் பெண்கள் எத்தனையோ, அத்தனை வெள்ளிக் குடங்கள். நானூறு ஐந்நூறு பேர் வந்தாலும், அத்தனை பேருக்கும் ஆளுக்கு ஒன்று என்று வெள்ளிக் குடங்கள் வைத்து, ஒவ்வொரு குடத்தினுள்ளும் ஒவ்வொரு வெள்ளிப் பிள்ளையாரைப் போட்டு, குடத்தில் தண்ணீர் நிரப்பி பூசனை புரிகிறார்கள். அதன் பின்னர் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு குடம் எடுத்து, அந்தக் குடத்தில் உள்ள தண்ணீரால் அபிஷேகம் செய்து கொள்கிறார்கள். நனைந்த உடலொடும், உடையோடும் பிள்ளையார் சந்நிதியிலே விழுந்து வணங்கி, எழுந்து நின்று தீப ஆராதனையைக் கண்டு களிக்கிறார்கள். அன்று கோயிலில் கொடுக்கும் பிரசாதமாகிய மோதக நைவேத்தியத்தை மட்டுமே அருந்துகிறார்கள். இப்படி விரதம் அனுஷ்டித்து, விரத பூர்த்தி செய்கின்ற பெண்கள் எல்லோரும் அவரவர்கள் பிரார்த்தனை செய்துகொண்ட எல்லா நலங்களையும் பெறுகிறார்கள். பெண்கள் மட்டும் என்ன - ஆண்களுமே இந்த சதுர்த்தி விரதம் அனுஷ்டித்தால் `எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்' என்பது திண்ணந்தானே. ஆனால் அபிஷேகம் எல்லாம் பெண்களுக்குத்தான் ; ஆண்களுக்கு இல்லை. பெண்ணின் பிரார்த்தனை நிறைவேறுகின்றதென்றால் அந்தப் பிரார்த்தனையில் நாயகனுக்கு வேண்டிய பிரார்த்தனையும் சேர்ந்துகொள்ளும் தானே. ஆதலால், தனியே ஆண்மகன் வேறு பிரார்த்தனை பண்ணிக்கொள்ளவேண்டுமா, அல்லது தான் அபிஷேகம் பண்ணிக்கொள்ள வேண்டுமா என்ன?

ஐந்து கரந்தனை ஆனைமுகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக்கொழுந்தினை
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே

**-திருமூலர்**

விநாயகரது பிறப்பைப்பற்றி எத்தனையோ கதைகள். அவைகளில் மிகக் கேவலமான கதைகளும் கூட உண்டு. என்றாலும் இரண்டு கதைகள் பிரசித்தமானவை ; நம் கவனத்தைக் கவரக்கூடியவை.

உமையும் சிவனும் ஒரு நாள் உய்யான வனத்திற்குச் செல்கிறார்கள். அங்கே ஒரு பிடியும் களிறும் கலவியில் களிப்பதைக் காணுகிறார்கள். அம்மையும் ஐயனும் பிடியும் களிறுமாக மாறிக் களிக்கின்றனர். அந்தக் கலப்பில் பிறக்கிறார் விநாயகர். இப்படிக் கூறுகிறது **சுப்பிரபேத ஆகமம்**. அதையே சொல்கிறார் **ஞானசம்பந்தர்**.

பிடியதன் உரு வுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதி வர அருளினன்

என்று. அதையே கொஞ்சம் மாற்றிக் கூறுகிறது காஞ்சிப் புராணம். சிவபிரானும் உமையும் ஓர் உய்யான வனத்திற்குச் செல்கிறார்கள். அங்குள்ள மந்திரசாலையில் பிரணவம் எழுதப் பெற்றிருக்கிறது. அதையே ஊன்றி நோக்கின்றனர் இருவரும். அந்த நோக்கிலே விநாயகர் அவதரிக்கிறார் என்று.

இந்தப் புராணக் கதைகள் எல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். உண்மையில் இவர் பிறந்தது **கலைஞனது சிந்தனையில்** தான். மக்கள் மாக்களுக்குள்ளே உருவத்தாலும் அறிவாலும் ஆற்றலாலும் சிறந்து விளங்குவது யானை. வயதால் கூட *120* வருஷம் வரை ஜீவித்திருக்கக் கூடியது அது. அதனால்த்தான் உலகத்தைக் தாங்கி நிற்கும் அஷ்ட திக்கஜங்களாக அதனைக் கற்பித்திருக்கிறார்கள், நமது முன்னோர். எவ்வளவோ வலிமையுடையதாக இருந்தாலும், ஒரு கட்டுக்குள் அடங்கி நிற்கும் இயல்பும் வாய்க்கப் பெற்றிருத்தலால், விரிந்த மனத்திற்கும், நிறைந்த அறிவுக்கும், உருவம் கொடுத்துக் கடவுளை உருவாக்க எண்ணியபோது, களிற்றின் உருவத்தைக் கற்பித்திருக்கிறான் கலைஞன். கண்டது, கேட்டது, உணர்ந்தது எல்லாவற்றையும், எக்காலத்திலும் மறவாத் அதி அற்புத ஞாபக சக்தி யானைக்கு உண்டு, என்பதை எத்தனையோ கதைகளின் மூலம் அறிவோம் நாம். மிக்க வலிமை பெற்றிருக்கின்ற அதே நேரத்தில், அளப்பரும் சாந்தமும் உடையது யானை. இதம் செய்வார்க்கு வசமாய் உதவுவதிலும் யானையைவிடச் சிறந்த உயிரே இல்லை, என்பது அறிஞர் துணிபு. ஆதலால் அருங்குணங்கள் பல அமைந்த யானையின் தலையுடன் ஒரு கடவுளை உருவாக்கிய கலைஞன் பாராட்டுதற்கு உரியவன் தானே.

முடிவும் அறிவும், அதாவது சித்தியும் புத்தியும் விநாயகருக்குத் திருவடிகள் - இல்லை - திருவடிவருடும் தர்மபத்தினிகள் ஆகின்றார்கள். தாழ் செவி சர்வ சக்தியையும், ஏக தந்தம் பரஞானத்தையும், ஒடிந்த தந்தம் அபயத்தையும், லம்போதரம் பொறுமையையும் அறிவிக்கும் அடையாள -ங்களாக அமைகின்றன. எல்லாவற்றினுக்கும் மேலாக உலகம் தோன்றுவதற்கு மூலகாரணமாம் `**ஓம்**' என்னும் **பிரணவ** உருவத்தி-லேயே தெய்வத்திரு உரு அமைகிறது. அதன் மூலம் அந்தத் திரு உருவே, அறிவுக்கு அறிவாகவும், எங்கும் வியாபித்து நிற்கும் பரம் பொருளாகவும், யாவராலும் அறியப்படாத நிலையிலேயும் எல்லோராலும் வணங்கப்படும் இயல்புடையதாகவும், இறைவனுடைய தன்மைகள் எல்லாம் நிறைந்து நின்று மக்களுக்கு அருள் செய்யும் திருக்கோலமாகவும் அமைந்துவிடுகிறது.

*பாசத்தளை அறுத்துப் பாவக்கடல் கலக்கி*
*நேசத் தளைப்பட்டு நிற்குமே - மாசற்ற*
*காரார்வரை ஈன்ற கன்னிப்பிடி அளித்த*
*ஓரானை வந்தென் உளத்து*

*- குமரகுருபரர்*

விநாயக வணக்கம் நீண்ட நாளாகவே தமிழ் நாட்டில் நிலைத்திருக்கிறது. அது மட்டுமல்ல ; எந்த தெய்வ வழிபாடும் விநாயக வணக்கத்தை முதன்மையாக வைத்தே நடந்து வருகிறது. விநாயகரை வணங்காமல் ஆரம்பித்த காரியங்கள் முட்டின்றி நிறைவேறுவதில்லை. நிரம்பச் சொல்வானேன். திரிபுரம் எரிக்கப் புறப்பட்ட சிவபிரான் விநாயகரை வணங்காமல் புறப்பட்டுவிட்டார். அவ்வளவுதான் ; தேரின் அச்சு முறிந்துவிட்டது. விநாயக வணக்கம், செய்த பின்பே தேர் நகர்ந்தது ; திரிபுர தகனமும் நிகழ்ந்தது. சிவபிரானும் `திரிபுராந்தகர்' என்று பெயர் பெற்றார். தந்தை பாடுதான் இப்படியென்றால் தம்பி பாடும் இதே கதைதான். கோலக் குறமகள் வள்ளியை மணக்க விரும்பிய குமரனும் அண்ணன் விநாயகரை மறந்துவிட்டான். அவ்வளவு தான் ; அவன் எண்ணம் நிறைவேறுவதாகக் காணோம். எத்தனையோ இடையூறுகள் வள்ளியை மணக்க கடைசியில் உணர்ந்தான் முருகன் தன் தவறை. அண்ணாவைப் பிரார்த்தித்தான் அன்போடு. அவரும் சமய சஞ்சீவியாக யானை உருவிலேயே வந்து, தம்பி விரும்பிய பெண்ணை ஆம், வள்ளியை அவனுக்கு மணம் முடித்து வைக்கிறார்.

சரிதான், எல்லாத் தேவர்களும் - ஏன்? எல்லா மனிதர்களுமே **பிள்ளையார் குட்டு குட்டி** விட்டுத்தான் தங்கள் காரியங்களைத் துவக்குகிறார்கள். **பிள்ளை யார் சுழி** போடாமல் எதையுமே எழுதத் தமிழன் முனைவதில்லை. இப்படி முன்னவர்க்கும் முன்னவனாய் நிற்கின்றவர் பிள்ளையார். அதனால்த்தான், சிவன் கோயிலில் மட்டுமல்ல விஷ்ணு கோயிலிலுமே அக்ரஸ் தானம் கிடைத்துவிடுகிறது அவருக்கு. சிவன் கோயிலில் பிள்ளையாராக, விநாயகராக, கணபதியாக முன் நிற்பவர்தான், பெருமாள் கோயிலில் **தும்பிக்கை ஆழ்வராக**, கோபுர வாயிலிலேயே அமர்ந்துவிடுகிறார் ; எல்லோரும் வணங்கும் முதல் தெய்வமாக ஆகிவிடுகிறார்.

இப்படி, தமிழ்நாட்டிலே காணும் விநாயக வணக்கம் பிற நாடுகளுக்கும் பரவியிருக்கிறது. கடல் கடந்தும் சென்றிருக்கிறது. எல்லோராக் குகையில் எழுந்தருளியதோடு நின்றுவிடாமல், **குஜராத்திலும் ஜைனர்கள்** வணங்கும் மூர்த்தியாக அமைந்துவிடுகிறார் இவர். ஜைனர்கள் மாத்திரம் என்ன, பௌத்தர்களுமே விநாயகரை வணங்கி வருகிறார்கள். கணபதி இருதயம் என்னும் மந்திரத்தை உருவேற்றுகிறார்கள். இத்துடன் **ஜாவாவில், ஜப்பானில், சைனாவில்**

**நேபாளத்தில்** எல்லாம் இந்த விநாயக வணக்கம் பரவியிருக்கிறது. **அமெரிக்காவில், சுவாமி விவேகாந்தர்** ஒரு கோயிலையே கட்டி, அங்கு விநாயகரைப் பிரதிஷ்டை பண்ணிவிட்டு வந்துவிட்டார்.

திருவாக்கும் ; செய்கருமம்
கைகூட்டும் ; செஞ்சொல்
பெருவாக்கும் ; பீடும்
பெருக்கம் - உருவாக்கும்
ஆதலால் வானோரும்
ஆனை முகத்தானை
காதலால் கூப்புவர்
தம் கை.

**- கபில தேவர்**

இப்படியெல்லாம் கலைஞனது சிந்தனையில் உருப்பெற்று, மக்களால் எல்லாம் வணங்கப்பெறும் இக்கடவுளின் திருவுருவத்தைச் சித்திரத்திலே எழுதினார்கள், கல்லிலே செதுக்கினார்கள், செம்பிலே வடித்தார்கள் தமிழர்கள். பாலகணபதி, மகாகணபதி, வீரகணபதி, சக்தி கணபதி, வாதாபி கணபதி, ஹேரம்ப கணபதி, பிரசன்ன கணபதி, உச்சிஷ்ட கணபதி என்றெல்லாம் எண்ணற்ற பெயர்களால் அழைத்தார்கள். இம்மட்டோ, ஆதிவிநாயகர், சோம விநாயகர், மாணிக்க விநாயகர், வரசித்தி விநாயகர், என்றும் பெயரிட்டு, இதைவிட இன்னும் அருமையாக ஆண்ட பிள்ளையார், வேதப் பிள்ளையார், உச்சிப் பிள்ளையார், கள்ளவாரணப் பிள்ளையார், கற்பகப் பிள்ளையார் என்றெல்லாம் செல்லப் பெயரிட்டு அழைத்து மகிழ்ந்திருக்கிறார்கள்.

இப்படி எல்லாம் பாராட்டப் பெற்ற விநாயகரை, கோயில் கர்ப்பக் கிரஹத்துக்குள் மட்டும் பூட்டி வைத்து விடவில்லை தமிழர்கள். ஊர் ஊராக, தெருத்தெருவாக, சந்திசந்தியாக, பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார்கள். பெரியவர்கள் மாத்திரம் அல்ல, சின்னஞ்சிறுவர்கள் ; அறிஞர்கள், பாமரர்கள், ஜாதியால் உயர்ந்தவர்கள், தாழ்ந்த இனத்தவர்கள் எல்லோரும் கண்டு தொழ, நெருங்கிப் பழகத் தகுந்த முறையில் எல்லாம் அமைத்திருக்கிறார்கள்.

தமிழ்க் கலைஞனது ஆசை இத்துடன் நின்று விடவில்லை. பிள்ளையாரை உட்கார வைத்துப் பார்த்திருக்கிறான் ; நிற்க வைத்தும் நோக்கியிருக்கிறான் ; நடம் ஆட வைத்தும் களித்திருக்கிறான் ; நடனம் ஆடும் விநாயகரை **நர்த்தன விநாயகர்** என்று நாமகரணமும் செய்திருக்கிறான்.

இந்த உலகமே ஒரு சுழற்சியின் வசப்பட்டது தான். அதனால் உலகில் உள்ள எல்லா உயிர்களும் ஆடத்தானே செய்ய வேண்டும். உலகம் ஆட, உயிர்கள் ஆட, மேரு பர்வதம் போன்ற பெரிய பொருள்களும் ஆட, விசாலமான ஆகாசத்திலே அண்டங்களும் ஆடுகின்றன, இறைவன் ஆடும் போது, அப்போது உள்ளத்தோடு உள்ளமாய் கலந்து நிற்கும் விநாயகரும் ஆடுகிறார் என்கிறார் **அதிரா அடிகள்**.

நிலந்துளங்க, மேருத் துளங்க நெடுவான்
நலந்துளங்க சப்பாணி கொட்டும் -
கலந்து உளங்கொள்
காமாரி ஈன்ற கருங்கைக் கடதடத்து
மாமாரி ஈன்ற மணி

என்பதுதானே பாட்டு. இந்த அற்புதத் தத்துவத்தை விளக்கும் அழகிய திரு உருவம்தான் நர்த்தன விநாயகர். அந்தத் திரு உருவங்களில் இரண்டைத் தான் பார்க்கிறீர்கள் இச்சிறு நூலிலே. ஒன்று **வேதாரண்யத்திலே** 'யாழைப் பழித்த மொழி' மங்கை பங்கன் கோயிலிலே. இது செப்புச் சிலை. அழகான திருவுரு. மற்றொன்று கற்சிலை. இந்தச் சிலை அன்று இருந்தது **தாராசுரம்** கோயிலிலே, இன்று இருக்கிறது **தஞ்சைக் கலைக்கூடத்திலே**. வென்றாடு திருத்தாதை வியந்து கைதுடிகொட்ட, நின்றாடும் மழகளிறாக இவ்விரண்டு திருவுருவங்களும் காட்சி கொடுக்கின்றன நமக்கு. இருந்த திருக்கோலத்தில் இருந்தவரையே, எழுந்து நடமாடும் கோலத்திலும் கண்டு களிக்கிறோம்.

இன்னும் அவரையே, மூஷிக வாகனத்தில் ஏறி சவாரி செய்துகொண்டு அவசரம் அவசரமாக எங்கேயோ ஓடும் கோலத்திலும் காணலாம். அப்படி ஓடும் கணபதிதான் வேலூர் ஜலகண்டேஸ்வரர் கோயில் கல்யாண மண்டபத்திலே ஒரு கல்த்தூணிலே இருக்கிறார். ஆம். அந்தக் கல்யாண மண்டபத்துச் சிற்பங்களை எல்லாம் கண்டு களித்த மேலைநாட்டு ரஸிக வைஸ்ராய் ஒருவர், மண்படத்தையே பெயர்த்து, தூண்களை யெல்லாம் எடுத்து கப்பலில் ஏற்றி, ஆங்கில நாட்டுக்கு கொண்டுபோய் அங்கே திரும்பவும் மண்டப்பத்தை கட்டி முடிக்கத் திட்டமிட்டுவிட்டார். இந்தத் திட்டம் நிறைவேறாமல் போகத்தான், இத்தனை விரைவில் இந்தப் பிள்ளையார் ஓடியிருக்கவேணும். திட்டமிட்டபடி கப்பல் வந்து சேரவில்லை. கல்யாண மண்டபமும் கப்பலில் ஏறவில்லை. எல்லாம் இந்த மூஷிக வாகனர் செய்த வேலை காரணமாகத்தான்.

இன்னுமொரு திருவுருவம் **ஹேரம்ப கணபதி** என்ற பெயரோடு. இவரையே **பஞ்சமுக விநாயகர்** என்று அழைக்கிறார்கள் மக்கள். ஒற்றை முகமும், ஒரு கோடும் உடையவர் மூஷிக வாகனத்தில் சவாரி என்றால், ஐந்து முகமும் அதற்கேற்ற கரங்களும் உடையவர் ஏறிச் சவாரி பண்ணவேண்டுவது சிம்ம வாகனத்தில்த்தானே? இந்தத் திருவுருவத்தை எல்லா இடத்திலும் காண்பது இயலாது. செப்பு விக்கிரஹ உருவில்

ஒன்றிருக்கிறது, நாகப்பட்டினம் நீலாயதாக்ஷி அம்மன் கோயிலிலே. அதன் திருவுருவத்தையும் இச்சிறு நூலிலேயே காணலாம், இப்படி எத்தனை எத்தனையோ திருவுருவங்கள்.

என்றாலும் **பிள்ளையார்பட்டியில்** அமைந்தள்ள விநாயகர் திருவுருவத்துக்குச் சில சிறப்பியல்புகள் உண்டு என்பதை மறுக்க முடியாது. இங்குள்ள விநாயகரது துதிக்கை வலம் சுழித்து, அவருக்கு **வலம்புரி விநாயகர்** என்ற பெயரைத் தேடித் தருகிறது. எல்லா இடத்தும் நான்கு திருக்கரத்தால் நான்கு திக்கிலும் ஆட்சி செய்பவர், இங்கு இரண்டே திருக்கரத்தால் விண்ணையும் மண்ணையும் ஆட்சிக்குள் கொண்டுவந்து விடுகிறார். அங்குசமும், பாசமும் இல்லாமலே, அடியவரை ஆட்சிகொள்ளும் சக்தி உடையவராக இருக்கிறார். வயிற்றை ஆசனத்தில் படியவிடாமல் அர்த்த பத்ம ஆசனத்திலேயே கால்களை மடித்திருக்கச் செய்து கொள்கிறார். வலக்கரத்தில் மோதகம் தாங்கி, இடக்கரத்தை இடையில் பொருத்தி பெருமிதத் தோற்றத்தோடு காட்சி கொடுக்கிறார். ஆதி நாளிலே இப்படி இரண்டு திருக்கரத்தோடு உருவானவர்தான், பின்னர் நான்கு திருக்கரங்களோடு எழுந்து நின்று, நடந்து நடமாடி மூஷிகத்திலும், சிம்மத்திலும் ஏறிச் சவாரி செய்பவராகக் கலைஞன் சிந்தனையிலே வளர்ந்திருக்கிறார்.

தடக்கை ஐந்து உடைத்<br>
          தாழ் செவி நீள்முடிக்<br>
கடக் களிற்றைக்<br>
          கருத்துள் இருதுதுவாம்

**- சேக்கிழார்**



நர்த்தன விநாயகர் – வேதாரண்யம்



பஞ்சமுக விநாயகர் – நாகபட்டினம்

பல்லவ மன்னன் மகேந்திர வர்மனிடம் சேனாதிபதியாக இருந்தவர். பரஞ்சோதி. மகேந்திரவர்மன் மகன் நரசிம்மவர்மனது சிறந்த நண்பர் அவர். மகேந்திரவர்மனுக்குப் பின் நரசிம்ம வர்ம பல்லவனிடமும் சேனாதிபதியாக இருந்திருக்கிறார். சளுக்கிய மன்னன் புலிகேசிமேல் நரசிம்மவர்மன் தொடுத்த போரில் முன்னின்று சேனையை நடத்தியிருக்கிறார். சளுக்கிய மன்னன் தலைநகரமான வாதாபி மீது படையெடுத்து, அந்தப் போரில் வெற்றி கண்டு அந்நகரைத் தீக்கிரையாக்கியிருக்கிறார். வாதாபி நகரம் பற்றி எரிகிற போது, அந்த நகரில் அகப்பட்டதை எல்லாம் சுருட்டிக் கொள்ளத் தன் படைவீரர்களுக்கு அனுமதி கொடுத்திருக்கிறான் நரசிம்ம வர்மன். எல்லாப் படை வீரர்களும் பொன்னையும் பொருளையும் கொள்ளை கொண்டு போகிற போது, பல்லவ சேனாதிபதி பரஞ்சோதி மட்டும், பொன்னிலும் பொருளிலும் மோகம் கொள்ளாமல், அந்த நகரத்தின் கோட்டை வாயிலில் இருந்த கணபதி விக்கிரஹத்தை மட்டும் தான் எடுத்துச் செல்ல மன்னனிடம் அனுமதி கேட்டிருக்கிறார். மன்னனோ அனுமதி கொடுக்கத் தயங்கவில்லை. அவ்வளவு தான். வாதாபிக் கோட்டையிலுள்ள கணபதி பெயர்த்து எடுக்கப்பட்டார். நாடு திரும்பிய வெற்றி வீரர்களோடு வீரராக, ஏன்-வீரர்கள் தலைவராகவே தமிழ்நாடு நோக்கிப் புறப்பட்டு விட்டார். பரஞ்சோதி. நேரே இந்த விநாயகரைத் தன் சொந்த ஊரான திருச்செங்காட்டங்குடிக்கே கொண்டு வந்து விட்டார். அங்குள்ள சிவன் கோயிலில் பிரதிஷ்டையும் செய்து வைத்துவிட்டார். வாதாபி கணபதி தமிழ் நாட்டிற்குள் வந்து நிலை பெற்றது இப்படித்தான்.

திருச்செங்காட்டங்குடியில் வாதாபி கணபதியை பரஞ்சோதியார் ஆம் பின்னர் தன்னைச் சிறுத்தொண்டர் - என்றே கூறிக் கொண்டவா - பிரதிஷ்டை செய்த திருநாளன்று பல்லவ மன்னன் நரசிம்மவர்மனும் வந்திருக்கிறான். பரஞ்சோதியாருடைய கைங்கர்யத்தைப் பாராட்டி-யிருக்கிறான். ஆனால் பரஞ்சோதியாருக்கு மட்டும் ஒரு சிறு கவலை. தன்னைப் போல் கணபதியின் பேரில் காதல் கொள்பவர்கள் யாராவது, தான் வாதாபியிலிருந்து கணபதியைப் பெயர்த்து எடுத்து வந்தது போலவே செங்காட்டங் குடியிலிருந்தும் பெயர்த்து எடுத்துச் செல்லலாம் அல்லவா என்பதுதான் அது. பரஞ்சோதியாருடைய கவலையை உணர்த்திருக்கிறான், நரசிம்மவர்மன். `அப்படி நடக்காது, கவலையே வேண்டியதில்லை' என்று அவருக்கு ஆறுதல் கூறி இருக்கிறான்.

என்றாலும், இந்த எண்ணம் அவன் உள்ளத்தில் ஊன்றி நின்றிருக்கிறது. தென்னாடு வந்து பல்லவச் சக்கரவர்த்தி தன் தந்தை மகேந்திர வர்மன், திருச்சி சித்தன்ன வாயில் முதலிய இடங்களில் கட்டிய குடைவரைக் கோயில்களையும், தீட்டிய சித்திரங்களையும் காண விரைந்து ஒரு சுற்றுப்பிரயாணத்தைக் துவங்கி இருக்கிறான். அந்தப் பிரயாணத்தில்தான், இன்றைய காரைக்குடியை அடுத்துள்ள குன்றக் குடியிலிருந்து மேற்கு நோக்கி நடந்திருக்கிறான். அப்படி நடந்த வழியில் ஒரு சிறிய குன்றைக் கண்டிருக்கிறான். இந்தச் சிறிய குன்றில் ஒரு கணபதியை செதுக்கி வைத்து விட்டால், அசைக்க முடியாதவராக அமர்ந்து விடமாட்டாரா அவர் என்றும் எண்ணியிருக்கிறான். அவ்வளவு-தான் அவன் எண்ணத்தை உருவாக்க முனைந்திருக்கிறார்கள். சிற்பிகள். மலையைக் குடைவது என்பதுதான் அவர்களுக்கு எளிதான காரியம் ஆயிற்றே. குடைவரைக் கோயில் ஒன்று உருவாகிவிட்டது. அங்கு தேசிவிநாயகப் பிள்ளையார் அசையாத பிள்ளையாக, அசைக்க முடியாத கணபதியாக அமர்ந்து விட்டார். திருவீங்கைக்குடி மகாதேவரும் உருவாகிவிட்டார். இருவருக்கும் இடையில் சிற்பிகள் நரசிம்மவர்மப் பல்லவனது திருவுருவையுமே செதுக்கி நிறுத்தி விட்டார்கள். அன்று முதல் இங்கு பிள்ளையார் ஆதிக்கம் செலுத்த முற்பட்டு விட்டார். ஈக்காட்டூர், மருதங்குடி, திருவீங்கைக்குடி, என்றெல்லாம் அழைக்கப்பட்ட இந்தச் சிற்றூரின் பெயர் அன்று முதல் **பிள்ளையார்பட்டி** என்று நிலைத்து விட்டது. பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் உருவான கதை இப்படித்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் தமிழ் நாட்டில் குடைவரைக் கோயிலில், பிள்ளையார் திருஉரு, அசைக்கமுடியாக திரு உருவம் அமைக்கின்ற வாய்ப்பு ஏற்படாதல்லவா? பிள்ளையாருக்கு இப்படி அசைக்க முடியாத அற்புதமான திருஉரு என்று அமைந்ததோ அன்றே இந்தப் பிள்ளையாரும் தமிழ் மக்களது உள்ளத்திலே அசைக்க முடியாதபடி நிரந்தரமான இடம் ஒன்றைப் பெற்று விட்டார்.

ஓத் வினை அகலும் ,
ஓங்கு புகழ் பெருகும் ;
காதற் பொருள் அனைத்தும்
கைகூடும்

என்ற நம்பிக்கையும் தமிழ் மக்கள் உள்ளத்தில் உண்டாகி விட்டது. அசைக்க முடியாத பிள்ளையார், அசையாத நம்பிக்கையை ஊட்டி இருப்பது வியப்பில்லை தானே



பிள்ளையார்பட்டி பிள்ளையார் கோவில்



பிள்ளையார்பட்டிப் பிள்ளையார்

பிள்ளையார்பட்டி ஒரு சிற்றூர். ராமநாதபுரம் ஜில்லாவில், காரைக்குடியிலிருந்து திருப்புத்தூர் செல்லும் வழியில் குன்றக்குடிக்கு மேற்கே இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. ஊருக்கு மத்தியிலே கோயிலும் குளமும். குளக்கரையைச் சுற்றி அகன்ற வீதி. நரசிம்மவர்மன் காலத்தில் உருவான குடைவரைக் கோயிலை மூலக் கோயிலாகக் கொண்டு பின்னர் இந்தக் கோயில் விரிந்து வளர்ந்திருக்கிறது. இப்படி விரிந்த கோயில்தான் இன்று மண்டபம், ராஜ கோபுரம் முதலியவைகளுடன் பெருங்கோயிலாக இருக்கின்றது. இந்தக் கோயிலில் கோயில் கொண்டிருப்பவர் மருதங்குடி நாயனார். கோயிலை விரிவாகவும் அழகாகவும் கட்டிமுடித்தவர்கள் நாட்டுக் கோட்டை நகரத்தார். கோயிலைக் கட்டிக் கோயிலுக்குமுன் ஒரு நல்லகுளத்தையும் வெட்டி இவற்றைச் சுற்றி நல்ல நல்ல விடுதிகளையும் அமைத்துத் தக்க முறையில் பாதுகாத்து வருகிறார்கள் · பதினாறு காரியக்காரர்கள். இக்காரியக்-காரர்கள்தான் பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார் என்ற கோத்திரத்தவர். இவர்களே, கோவில் பூசை, படித்தரம் முதலியவைகள் சிறப்பாக நடைபெறக் கோயில் வருமானம் போதாமல் இருப்பதால் தங்கள் சமுதாய நிதியிலிருந்து கொடுத்து உதவுகிறார்கள்.

இந்தக் கோயிலில் நடைபெறும் விழாக்களில் இரண்டு பிரசித்தம். ஒன்று மார்கழியில் திருவாதிரைத் திருநாள். மற்றொன்று விநாயக சதுர்த்தி. திருவாதிரை நாளன்று சிவகாம சுந்தரி சமேதராக நடராஜர் வீதி உலா வருவார். அன்று சிவகாம சுந்தரியின் ஊடலைத் தீர்க்க, நடராஜர் எழுதிக் கொடுக்கும் பிடிபாடு மிக்க அழகானது. அதாவது தனக்கு எவ்வளவு சொத்திருக்கிறது என்பதை எல்லாம் அழகாகக் எடுத்துக் கூறிச் சிவகாமியின் ஊடல் தீர்க்க விரைவார். சிவகாமியின் ஊடல் தீர்கிறதோ இல்லையோ, கோயிலின் நிலபுல விவரம் முழுவதும், ஆண்டு தோறும் அறுவடைக்காலமான மார்கழியில் ஊரார் எல்லாம் அறியப் படிக்கப் பெறுவது என்பது வரவேற்கத் தக்கஒன்றுதானே. இந்தக் கோயிலில் பெருந் திருவிழா விநாயக சதுர்த்தியே. பிள்ளையார் ஆதிக்கம் உள்ள இந்தக் கோயிலில் சதுர்த்தி பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது ஆச்சரியமில்லைதான். விழா மற்றக் கோயில்களில் எல்லாம் நடை-பெறுவதுபோல, பத்து நாட்களும் சிறப்பாக நடைபெறுகிறது. பத்தாம் நாள் நடக்கும் விழாத்தான் இக் கோயிலுக்கே உரிய தனிச் சிறப்போடு நடத்தப் பெறுகிறது.

விழாவைப் பற்றிச் சொல்லுமுன் விரதத்தைப் பற்றி, அவ்விரதம் ஏற்பட்ட விதத்தைப் பற்றி ஒரு வார்த்தை.

ஒரு நாள் விநாயகர், தேவர்கள் எல்லாம் கண்டு களிக்கக் கைலாயத்திலே நர்த்தனம் செய்திருக்கிறார். சரிந்த தொந்தி, மோதகம், ஏந்திய கை, குறுகிய கால்கள் இவைகளுடன் ஆடிய விநாயகரது நடனத்தைக் கண்டு, சந்திரன் சிரித்திருக்கிறான். ஆம். யாருக்குத்தான் விநாயகர் அல்லது விநாயகரைப் போன்ற உருவம் படைத்தவர்கள் நடனம் ஆடுவதைக் கண்டால் சிரிக்காமலிருக்க முடியும்? ஒன்று சந்திரன் சிரித்ததற்கு ஒரு பொய்யையாவது கற்பனை பண்ணி சொல்லத் தெரிந்திருக்கவேணும். இரண்டும் செய்யவில்லை. வாய்விட்டே சிரித்து விட்டான் அவன். அவ்வளவுதான் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது விநாயகருக்கு. அதனால் பிடிசாபம் என்று கோபமாக சந்திரனைக் சபித்தே விட்டார். சாபமோ, அன்று முதல் சந்திரன் உருவை ஒருவருமே பார்க்கமாட்டார்கள். கண்டவரும் நிந்தை செய்து ஒதுக்கி விடுவார்கள். அத்தகைய நீசனாக அவன் ஆகட்டும் என்றுதான். நல்ல களை பொருந்திய உருவம் கொண்ட சந்திரனோ, அன்று முதல் கலை இழந்து தேய்ந்து தேய்ந்து மெலிந்தான். கண்டவரும் வெறுத்து ஒதுக்கினர். வெட்கத்தால் உருவம் குன்றிய சந்திரன் பிரமனிடம் சென்று முறையிட்டான். சாபமிட்டவர்தான் சாப விமோசனத்தையும அருள வேண்டும் என்று சொல்லிச் சந்திரனை விநாயகரிடத்தில் கூட்டிச் சென்றார் பிரமன். சந்திரனும் விநாயகர் திருவடியில் விழுந்து வணங்கி, தெரியாது செய்த பிழையை மன்னித்தருள வேண்டினான். பிரம்மாவும் அவனுக்காகப் பரிந்துபேசினார், `தவறு செய்ததற்குத் தண்டனை செய்ய வேண்டியதுதான். ஆனால் அது நிரந்தத் தண்டனையாக இருக்க வேண்டாமே. வருஷத்தில் ஒரு சில நாட்கள் மட்டுமே அந்தத் தண்டனையை அவன் அனுபவிக்குமாறு அருள் .புரியலாமே' என்றார் பிரமன். விநாயகரும் மனம் இரங்கி, `சக்ல சதுர்த்தியில் உன்னைக் காண்பவர்கள் எல்லாம் வீண் அபவாதம் அடையட்டும். ஆனால் ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில், என்னைப் பூசித்தால் அந்த அபவாதம் நீங்கட்டும்' என்று சாபத்தை மாற்றி அருளினார். இது காரணமாகத்தான் வளர் பிறையில் சதுர்த்தியன்று இன்றும் மக்கள் சந்திரனைப் பார்க்காது ஒதுக்குகிறார்கள். அப்படித் தப்பித் தவறிப் பார்ப்பவர்களும், ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் விரதம் அனுஷ்டித்து விநாயகரை வணங்கிச் சாப விமோசனம் பெறுகின்றனர்.

இப்படித்தான் சதுர்த்தி விரதம் அன்று முதல் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது என்று கூறுகின்றன புராணங்கள்.

அதிலும் இந்த விரதம் பெண்கள் அனுஷ்டிக்க வேண்டிய முக்கிய விரதம் என்றும் சொல்லுகின்றன. காரணம்! இந்த உலகத்தில் ஆண்களை விடப் பெண்களே காரணமே இல்லாமல் வீண் அபவாதத்திற்கு உள்ளாகின்றார்கள். ஆதலால் அவர்கள்மேல் ஏற்படும் வீண் அபவாதங்கள் நீங்கவும் அவர்கள் மிகவும் விரும்பும் பிள்ளைப்பேறு முதலிய எண்ணங்கள் சித்தி பெறவும், சித்தி விநாயகரை அவர் விரும்பிய சதுர்த்தி அன்று விரதம் அனுஷ்டித்து வணங்குதல் வேண்டும். வருஷம் முழுவதும், இருபத்துநான்கு சதுர்த்தியிலுல் விரதம் அனுஷ்டிப்பதோடு ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் விரத பூர்த்தி செய்து விநாயகரைத் தொழுதால் பெறுதற்கரிய பேறுகளையெல்லாம் பெறலாம் என்பது மக்கள் நம்பிக்கை.

பிள்ளையார் பட்டியில் சதுர்த்தி விரதம் எல்லோராலும், சிறப்பாகப் பெண்களாலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. வருஷம் முழுவதும் - ஆம், இருபத்து நான்கு சதுர்த்தி திதியிலும் விரதம் அனுஷ்டித்தவர்கள் எல்லாம், வருஷக்கடைசியில் ஆவணி மாதம் சுக்லபக்ஷ சதுர்த்தியன்று விரத பூர்த்தி செய்கிறார்கள். அன்று பிள்ளையார் பட்டி பிள்ளையார் சந்நிதியில், வருஷம் முழுவதும் விரதம் அனுஷ்டித்த பெண்கள் ஒன்று கூடுகிறார்கள். விரத பூர்த்தி செய்ய வந்திருக்கும் பெண்கள் எத்தனையோ அத்தனை வெள்ளிக் குடங்கள். நானூறு ஐந்நூறு பேர் வந்தாலும், அத்தனை பேருக்கும் ஆளுக்கு ஒன்று என்று வெள்ளிக் குடங்கள் வைத்து ஒவ்வொரு குடத்தினுள்ளும் ஒவ்வொரு வெள்ளிப் பிள்ளையாரையும் போட்டு குடத்தில் தண்ணீர் நிரப்பிப் பூசனை புரிகிறார்கள். அதன் பின்னர் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு குடம் எடுத்து அபிஷேகம் செய்து கொள்ளுகிறார்கள். நனைந்த உடலோடும், உடையோடும் பிள்ளையார் சந்நிதியிலே விழுந்து வணங்கி, எழுந்து நின்று தீப ஆராதனையைக் கண்டு களிக்கின்றார்கள். அன்று கோயிலில் கொடுக்கும் பிரசாதமாகிய மோதக நைவேத்தியத்தை மட்டுமே அருந்துகிறார்கள். இப்படி விரதம் அனுஷ்டித்து விரத பூர்த்தி செய்கின்ற பெண்கள் எல்லோரும் அவரவர்கள் பிரார்த்தனை செய்து கொண்ட எல்லா நலன்களையும் பெறுகிறார்கள். பெண்கள் மட்டும் என்ன? ஆண்களுமே இந்தச் சதுர்த்தி விரதம் அனுஷ்டித்தால் எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் என்பது திண்ணந்தான். ஆனால் அபிஷேகம் எல்லாம் பெண்களுக்குத்தான். ஆண்களுக்கு இல்லை. பெண்ணின் பிரார்த்தனை நிறைவேறுகின்றதென்றால் அந்தப் பிரார்த்தனையில் நாயகனது பிரார்த்தனையும் சேர்ந்து கொள்ளும்தானே! ஆதலால் தனியே ஆண்மகன் வேறு பிரார்த்தனை பண்ணிக் கொள்ள வேண்டுமா, அபிஷேகம் பண்ணிக் கொள்ள வேண்டுமா-என்ன?

சதுர்த்தி விரதம் மேற்கொள்ள விரும்பும் எல்லோரும் பிள்ளையார்பட்டிக்குப் போகலாம். இல்லை அதற்கெல்லாம் அவகாசம்

ஏது என்று சொல்லும் கலையன்பர்களுமே அங்கு சென்று காண வேண்டியவை பல உண்டு. முதலில் பல்லவ மன்னன் கட்டிய குடைவரைக் கோயிலை, மாமல்லபுரம், மகேந்திரவாடி, மாமண்டூர், திருச்சிராப்பள்ளி, திருமெய்யம் முதலிய ஊர்களில் உள்ளகுடைவரைக் கோயில்களோடு ஒப்பிட்டு, பல்லவர் காலத்தில் சிற்பக் கலை எப்படி எல்லாம் வளர்ந்தோங்கியிருக்கிறது என்று கண்டறிய இயலும். அதற்குமேல் இந்தக் குடைவரைக் கோயிலில் உள்ள பிள்ளையார், எப்படி மற்றத் தமிழ் நாட்டுப் பிள்ளையார் உருவங்களிலிருந்து வேறுபட்டிருக்கிறார் என்பதும் தெரியும்.

இங்குள்ள விநாயகரது துதிக்கை வலம் சுழித்து, அவருக்கு வலம்புரி விநாயகர் என்ற பெயரைத் தேடித்தருகிறது. எல்லா இடத்தும் நான்கு திருக்கரத்தால் நான்கு திக்கிலும் ஆட்சி செய்பவர் இங்கு இரண்டே திருக்கரத்தால் விண்ணையும் மண்ணையும் ஆட்சிக்குள் கொண்டு வந்து விடுகிறார். அங்குசமும், பாசமும் இல்லாமலே அடியவரை ஆட்கொள்ளும் சக்தி உடையவராக இருக்கிறார். வயிற்றை ஆசனத்திலே படிய விடாமல் அர்த்த பத்ம ஆசனத்திலேயே கால்களின் மீது படிந்திருக்கச் செய்து கொள்ளுகிறார். வலக்கரத்தில் மோதகம் தாங்கி இடக்கரத்தை இடையில் பொருத்தி பெருமிதத் தோற்றத்தோடு காட்சி கொடுக்கிறார். ஆதி நாளிலே உருவானவர், இப்படி இரண்டு திருக்கரத்தோடு இருந்துதான் பின்னர் நான்கு திருக்கரங்களோடு எழுந்து, நடந்து, நின்று, நடமாடி, மூஷிகத்திலும், சிம்மத்திலும், ஏறிச் சவாரி செய்து கலைஞன் சிந்தனையிலே வளர்ந்திருக்கிறார் என்று ஆராய்ச்சியாளர் முடிவு செய்யலாம் தானே.

இத்தோடு இந்தக் கோயிலில் இருக்கும் இரண்டு செப்புச் சிலைகள் மிக்க அழகுவாய்ந்தவை. அவைதாம் சுந்திரசேகர மூர்த்தியும், அவரது துணைவியும். நல்ல சோழர் காலத்துச் சிலை. ஆயிர வருஷ காலத்துக்கு முன்பே உருவாகி இருக்க வேண்டும். நிற்கும் நிலையையும் மணி மகுடத்தையும் பார்த்ததுமே எளிதாகச் சொல்லிவிடலாம். மானும் மழுவும் தாங்கி, பிறையும் மகுடமும் அணிந்து, அபயகரத்தோடு அருள்பாலிக்கும் திருஉருவாக அமைந்திருக்கிறார் இறைவன். ஆணுக்குப் பெண் அழகு என்பது போல் அன்னைபார்வதி அவரை விட அழகாக இருக்கிறாள். ஆடையும் அணியும் அவள் அற்புத சௌந்தர்யத்தை அதிகப்படுத்தவில்லைதான். அவள் நிற்கின்ற ஒயிலிலே காம்பீர்யம் இருக்கிறது. ஓர் அழகு சுடர் விடுகிறது.

பிள்ளையார்பட்டிக்குச் சென்று நேரில் காணும் வாய்ப்பு ஒன்றை ஏற்படுத்திக்கொண்டால் இவர்களை எல்லாம் கண்டு தொழலாம். கற்பக விநாயகரிடமும் பிரார்த்தித்துக் கொள்ளலாம். ஏன் கோபுரதரிசனமும் பண்ணலாம், செல்பவர்கள் எல்லோரும்.

இந்தப் பிள்ளையாரைப் பற்றித் தான் எத்தனை எத்தனை கதைகள், சிவபுராணம், விநாயக புராண்ம், காஞ்சிப் புராணம், முதலிய நூல்களில். ஒ்ரு சில கதைகள் ரஸமானவை; நல்ல அனுபவத்தின் அடிப்படையிலே உருவானவை; சிறந்த உண்மைகளை உணர்த்துபவை. அவைகளைத் தெரிந்து கொள்ளலாம்தானே.

நம் நாட்டின் இதிகாசங்கள், இராமாயணம், பாரதம் என்பதை எல்லோரும் அறிவர். பாரதத்தை இயற்றியவர் வியாசர் என்பதையும் தெரிவோம். அந்த வியாசருக்குக் கற்றுச் சொல்லியாக ' அமைந்து, பாரதத்தையே எழுதியவர் விநாயகர் என்பது வரலாறு பாரதத்தை எழுதத் திட்டமிட்டார் வியாசர். அதை அவர் சொல்லும் வேகத்தோடு வேகமாய் விரைவாய் எழுத வேண்டுமே அதற்கு ஒர் ஆள் தேடினார். நல்ல அறிவுடைய பிள்ளை, ஆற்றல் மிகுந்த பிள்ளை, விநாயகரையே தேர்ந்தெடுத்தார். எண்ணாயிரத்து எண்ணூறு சுலோகங்கள், விரைவாகச் சொல்லிக் கொண்டே போனார் வியாசர். எழுதிக் கொண்டே வந்தார் விநாயகர். இடையே எழுதுகோல் கூர் மழுங்கி எழுத்து வேகம் தடைப்பட்டது. ஆனால் ஏகாக்கிர சித்தத்தோடு சுலோகங்களைச் சொல்லிக்கொண்டு வந்த வியாசரோ நிறுத்த வில்லை. விநாயகரோ அவரது உணர்ச்சி வேகத்தைத் தடை செய்ய விரும்பவில்லை. எழுத்தாணி கூர் மழுங்கியதை அப்படியே தூர எறிந்துவிட்டு, தன்னுடைய கொம்புகளில் ஒன்றையே ஒடித்து எழுத்தாணியாக்கிக் கொண்டு தொடர்ந்து எழுதி முடித்தார் பாரதத்தை. நல்ல ரஸமான கதை. `சோர்வில்லாமலே எக்காலத்தும் பிள்ளைகள் படிக்கவும் எழுதவும் வேண்டும்' என்று எடுத்துக் காட்டும் நல்ல பிள்ளையாக அல்லவா பிள்ளையார் அமைந்து விடுகிறார். அதனால்தான் பிள்ளையார் இன்றும் பிள்ளைகளின் தெய்வமாகவே வாழ்கிறார் ; வணங்கப்படுகிறார்.

ஏர்பூத்த ஒருகோட்டால்
இலகு பாரத மேரு
இடத்தே தீட்டும்
போர் பூத்த நெடுந்தடக்கைப்
பொல்லாத பிள்ளை பதம்
போற்றல் செய்வாம்

**-நெல்லையப்ப பிள்ளை.**

பிள்ளைகளுக்கு உகந்தவராக மட்டும் பிள்ளையார் இல்லை. நாட்டு மக்களுக்கும் நல்லவராக நடந்திருக்கிறார். கங்கை யென்னும் கடவுள்த் திருநதியையே காவிரியாகத் தமிழ் நாட்டிற்கு கொண்டு வந்தவரும், அதனால் நாடுநலம் பெறச் செய்தவரும் அவரேதான். கதை இதுதான். கயிலை மலையிலே திருக்கல்யாணம், பார்வதி தேவிக்கும் பரமசிவனுக்கும் தேவர்களும் மற்றவர்களும் திருமணம் காண கூடிவிட்டார்கள் அங்கே. அதனால் வடநாடு தாழ்ந்து தென்னாடு தூக்கி விட்டது. நாடு சமன் செய்யப்படவேண்டும் உடனே என்று கருதினார் பரமசிவன். கல்யாணத்துக்கு வந்த விருந்தினர்களை திருப்பி-யனுப்புவதோ இயலாத காரியம். ஆதலால் தன்னையொத்த தவவலிமை உடைய **அகத்திய முனிவரையே** தென் திசை செல்லுமாறு பணித்தார். அகத்தியரும், புறப்படும் போது பரமசிவனது திருமுடியில் உள்ள கங்கையை தன் கமண்டலத்தில் ஏந்தி தன்னுடன் கொண்டு வர மறக்கவில்லை. வருகிற வழியில் நித்திய கர்மங்களை முடிக்க வேண்டி தன் கமண்டலத்தை தரையில் வைத்தார். சமயம் பார்த்துக் கொண்டிருந்த விநாயகர், இதுதான் தக்க தருணம் என்று எண்ணி, காக உருவில் வந்து கமண்டலத்தைக் கவிழ்த்து விட்டார். ஓடிப் பெருகியது கங்கை தமிழ் நாட்டில். காகத்தால் விரிக்கப்பட்ட கங்கைதான் அன்று முதல் காவிரியானாள் தமிழ் நாட்டில். `காகம் கவிழ்த்த காவிரிப் பாவை' எனப் பாடப்பெறும் பேறும் பெற்றாள். இதனால் நாடு வளம் உற்றது ; சோழ வளநாடு சோறு பெற்றது. ஆம். எல்லாம் விநாயகர் அருளினால்த்தான்.

பரிந்தார்க்கு அருளும்
பரிசுங் கண்டேன்
பாராகிப் புனலாகி
நிற்கை கண்டேன்
விருந்தாய்ப் பரந்த
தொகுதி கண்டேன்
மெல்லியலும் - விநாயகனும்
தோன்றக் கண்டேன்

**- நாவுக்கரசர்**

தமிழ் நாட்டில் பிள்ளையாரை வணங்கி வீடுபேறு பெற்றவர்கள் கதை அனந்தம். என்றாலும் வாழ்வோடு வாழ்வாக பிள்ளையாருடன் ஒட்டிக்கொண்டவள் ஔவைப் பிராட்டி. இளமையிலேயே பிள்ளையார் வணக்கம் அவள் உள்ளத்தில் ஊன்றி விட்டது.

வேழமுக்த்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுத்து வரும்

என்று தமிழ் நாட்டப் பிள்ளைகளுக்கெல்லாம் போதித்தவர் அவர்தான்.

"சீதக் களபச் செந்தாமரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே"

என்றெல்லாம் பாடி விநாயக வணக்கத்தை தமிழர்கள் உள்ளத்தில் ஊன்றச் செய்வதரும் அவரே தான். அவர் முக்தியடைந்ததும் அந்தப் பிள்ளையார் மூலமே தான். கதை நல்ல அற்புதமான கதை.

சேரமன்னன், சேரமான் பெருமாள் நாயனாரும் அவரது தோழர் சுந்தரமூர்த்தி நாயனாரும் நாட்டில் செய்ய வேண்டியவைகளை எல்லாம் செய்து முடித்தபின்னர், கயிலாயம் நோக்கிப் புறப்பட்டனர். இருவரும் சென்றனர் யானை மீதும், குதிரை மீதும் ஏறிக் கொண்டு. செல்லும் வழியிலே ஔவையைக் கண்டனர். அந்த அம்மையையும் உடன்வர அழைத்தனர். அம்மையோ அப்போது விநாயகருக்குப் பூசை செய்து கொண்டிருந்தார். நண்பர்களுடன் எளிதாகக் கயிலாயம் செல்லலாமே என்ற ஆசை ஔவையாருக்கு. ஆதலால் விரைவிலேயே பூசையை நடத்திவிட முனைந்தார். ஒவையாரின் அவசரத்தை அறிந்த பிள்ளையார்

ஏன் பாட்டி! இத்தனை அவசரம் இன்று?' என்று கேட்டார். விஷயத்தைச் சொன்னார் ஔவையார். `அடடா! இதுதானா? உன் நண்பர்களைப் போகச் சொல். அவர்கள் அங்கு செல்லுமுன் நான் உன்னை கயிலாயம் கொண்டு சேர்க்கிறேன்' என்றார். அவசரப்பட்ட சேரமானும் சுந்தரரும் சென்று விட்டார்கள். அம்மையும் நிதானமாகவே பூசை செய்தார். பூசை முடிந்ததும், அப்படியே அம்மையை தன் தும்பிக்கையாலேயே அநாயாசமாகத் தூக்கி, கயிலாயத்திலே இறக்கி விடுகிறார் பிள்ளையார். ஔவையாரும் கயிலாய வாசலிலே நின்று முன் சென்ற சேரமானையும் சுந்தரரையும் `வருக! வருக!' என வரவேற்கிறார். `எப்படி, இந்த ஔவையார் தமக்கு முன் கயிலாயம் வந்து சேர்ந்தார்?' என்று அறியாது திகைத்தனர் இருவரும். ஆம், பிள்ளையாரைப் பின்பற்றினால் கயிலாயம் சேர்வது எளிதாகவும் இருக்கும் ; விரைவாகவும் நடக்கும் என்று தெரிந்தனர். அவர்கள் இருவரும் அன்று. அதையே நாமும் தெரிந்து கொள்கிறோம் இன்று.

மதுரமொழி நல்லுமையாள்
புதல்வன் மலர்ப்பதத்தை
முதிர நினைய வல்லார்க்கு அரிதோ?
முகில் போல் முழங்கி,
அதிர நடந்திடும் யானையும் தேரும்
அதன்பின் வரும்
குதிரையும் காதம், கிழவியும் காதம்
குலமன்னனே!

- ஔவையார்

இன்னுமொரு கதை. சிதம்பரத்தை அடுத்த திருநாரையூரிலே உள்ள பிள்ளையார் பொல்லாப் பிள்ளையார். பொல்லா என்பதனால் அவர் ஒரு பொல்லாத பிள்ளை அல்ல. சிற்றுளியால் பொள்ளப்படாத சுயம்பு மூர்த்தி என்பதனால்த்தான், அவரைப் பொள்ளாப் பிள்ளையார் என்று மக்கள் அழைத்தனர். நாளாவட்டத்தில் பொல்லாப்பிள்ளையாகவே மாறிவிட்டார். உலக வழக்கில். ஆனால் இந்தப் பொல்லாப் பிள்ளை செய்த பொல்லாத வேலை காரணமாகவே, நமக்குத் தெய்வம் மணக்கும் தேவாரப் பாக்கள் எல்லாம் கிடைத்திருக்கின்றன். திருநாரையூரிலே பிள்ளையாருக்குப் பூசை செய்து வந்தவர் ஓர் அந்தணர். ஒரு நாள வெளியூர் செல்ல விரும்பியபோது தன் மகனை பூசை செய்யும் படி பணித்துவிட்டுச் சென்றிருந்தார். பிள்ளை என்னத்தைக் கண்டான்? பூசையை முடித்து, நைவேத்தியத்தை பிள்ளையார் முன் வைத்து அவர் அதை உண்ண வேண்டினான். அசையாது கல்லுப் பிள்ளையாராக இருந்தார் பொல்லாப் பிள்ளையார். பார்த்தான். அந்தணச் சிறுவன். உண்ணுகின்றீரா, இல்லாவிட்டால் உமது திருவடியிலே என் தலையை மோதி உடைத்துக்கொள்ளவா? என்றான். இப்படிச் சும்மா பயங்காட்டவில்லை. உண்மையாகவே தன் தலையை மோத முனைந்துவிட்டான். பார்த்தார் பிள்ளையார், தும்பிக்கையை நீட்டி, வாயைத் திறந்து அவன் தந்த நைவேத்தியத்தை எல்லாம் வாங்கி வாங்கி உண்டார். இதை, ஊர் திரும்பிய தந்தை நம்பவில்லை முதலில். மறுநாள் மறைந்திருந்து நிகழும் அற்புதத்தைக் கண்டார். அவ்வளவுதான் பொல்லாப் பிள்ளையாருக்கு அமுதூட்டிய அந்தணச் சிறுவன் **நம்பியாண்டார் நம்பியாகி** விடுகிறான். சோழ மன்னன் ராஜராஜன் இந்த நம்பியை வந்து கண்டு வணங்குகிறான். அவன் ஆர்வம் தீர, அந்தப் பிள்ளையாரே நம்பியிடம் திருமுறைகள் இருக்கும் இடத்தையும், அதைப் பெறும் வகையையும் எடுத்துரைக்கிறார். சிதம்பரத்திலே சமயகுரவர் மூவரும் கைச்சாத்திட்டு வைத்திருந்த அறையில் இருந்த திருமுறை அம்பலத்துக்கு வந்துவிடுகிறது. நாட்டுக்கு வேண்டிய அற்புதமான பாக்கள் அனைத்தும் கிடைத்து விடுகிறது நமக்கு. பொல்லாப் பிள்ளையாரும் `திருமுறை கண்ட பிள்ளையார்' என்று புதிய பட்டத்தையும் தட்டிக்கொண்டு போய்விடுகிறார். நாடு நலம் பெற, காகம் கவித்து காவிரி கொணர்ந்தவரே, மக்கள் உள்ளம் இறைவனிடம் ஈடுபடத் திருமுறைகளையும் தேடியெடுத்துக் கொடுத்துவிடுகிறார்.

கணபதியின் பிள்ளைவிளையாட்டிலே சிறந்தது கஜமுகாசுரனை வென்றதுதான். அசுர குலத்திலே, மாகத முனிவருக்கும் விபுதைக்கும் மகனாக கஜமுகாசுரன் பிறக்கிறான். வழக்கம்போல் தேவர்களை எல்லாம் துன்புறுத்துகிறான். தேவர்கள் சிவனிடம் முறையிடுகிறார்கள். தேவர் குறை தீர்க்கத் திருஉளம்கொண்ட சிவபிரான், தன்னுடைய அம்சத்திலே கணபதியை சிருஷ்டிக்கிறார். யானை முகத்தோடும், ஐந்து திருக்கரங்களோடும், மூன்று திருக்கண்களோடும் அவதரித்த இந்தப் பிள்ளையை சிவகணங்களுக்கு எல்லாம் தலைவனாக்குகிறார் சிவபெருமான். கணங்களுக்கு எல்லாம் தலைவனாய் அமர்ந்த கணபதி கஜமகாசுரனுடன்போர் தொடுக்கிறார். கஜமுகனோ எத்தனையோ, மாயைகளை நிகழ்த்தி கடும் போர் புரிகிறான். கடைசியில் பெருச்சாளி வடிவோடு வந்தபோது, அவனை அடக்கி அவன் மேலேயே ஆரோகணித்து, தன்னை அன்று முதல் சுமக்கச் செய்துவிடுகிறார்.

கஜமுகாசுரன் தேவர்களை எல்லாம் அடக்கி ஆண்ட பொழுது, அவன் தேவர்களை எல்லாம் அடிமைகளாக நடத்தி, தங்கள் தங்கள் தலையில் மும்முறை குட்டி, இரண்டு கைகளாலும் எதிர் எதிராக காதுகளைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போடச் செய்து வந்தான். இப்படி கஜமுகாசுரன் முன்பு செய்து கொண்டதைத்தான், கணபதி கஜமுகாசுரனை வென்று அடக்கிய பின்பும் அவர் முன் செய்யத் தலைப்பட்டனர். இப்படித் தேவர் செய்யும் திருத்தொண்டு கணபதிக்கு உகந்ததாயிருக்கிறது. அதனால்த்தான், இன்றும் கணபதியை வணங்குவோர் தலைகளில் குட்டிக் கொண்டு, காதைப் பிடித்துத் தோப்புக்கரணம் போட்டு வணங்குகின்றனர். ஆணவம் மிகுந்துள்ள ஆடவர் எல்லாம் இப்படி குட்டிக் கொண்டு தோப்புக்கரணம் போடுவதாலேயே, தன்முனைப்பு நீங்கினவர்களாய், என்றும் இறைவனுக்கே ஆட்படும் பேறு பெறுகிறார்கள். ஆண்டவன் சந்நிதியிலே தன் முனைப்பு நீங்கத்தானே தரையில் விழுந்து வணங்குகிறோம்; தோப்புக்கரணம் போடுகிறோம்.

என்னை நினைந்தடிமை
கொண்டு என் இடர் கெடுத்துத்
தன்னை நினையத்
தருகின்றான் - புன்னை
விரசு மகிழ் சோலை
வியன் நாரை யூர் முக்கண்
அரசுமகிழ் அத்தி முகத்தான்.

**- நம்பியாண்டார் நம்பி**

## முடிப்புரை

இன்னும் எத்தனையோ கதைகள் விநாயகரைப் பற்றி. ஒரு போட்டிப் பந்தயத்தில் அவர் வெற்றி பெற்ற கதையை மட்டும் கடைசியாகச் சொல்லி விடுகிறேன்.

ஒருநாள் பார்வதியும் பரமேஸ்வரனும் கைலாயத்தில் இருக்கும் போது கலகப்பிரியரான நாரதர் ஒரு நல்ல மாங்கனி ஒன்றைக் கொண்டு வந்து இறைவனிடம் கொடுக்கிறார். வாங்கிய கனியை அன்னையிடம் அளிக்கிறார் அவர். கனி பெற்ற தந்தையும், தாயும், குழநதைகளை நினைக்கின்றனர், எல்லோரும் பகிர்ந்து உண்ணலாமே என்று. பிள்ளைகள் இருவரும் - ஆம், பிள்ளையாரும் முருகனுந்தான் வந்து சேருகின்றனர்.

பிள்ளைகளைக் கண்டதும் சிவபெருமானுக்கு - ஒரு விளையாட்டுப் போட்டி நடத்தலாமே என்று தோன்றுகிறது. உடனே, கனியைக் காட்டி, `உங்களுக்குள் ஒரு பந்தயம். யார் முதலில் உலகைச் சுற்றி வருகிறார்களோ அவர்கள்தான் இக்கனியைப் பெறுவார்கள்' என்கின்றார். முருகன் நினைக்கிறான், அண்ணன் மூஷிக வாகனத்தில் ஏறி அவனியைச் சுற்றிவருவதற்குள்ளே நாம் மயில் வாகனத்தில் மாநிலம் சுற்றிவந்து விடலாமே'. என்று. உடனே மயில்மேல் ஏறி உலகம் சுற்றப் புறப்பட்டு விடுகிறான். அமுத்தலாக இருக்கிறார் பிள்ளையார். சாவதானமாக அன்னையையும் அத்தனையையும் சேர்த்து ஒரு சுற்றுச் சுற்றுகிறார். மாங்கனிக்கு கையை நீட்டுகிறார். `என்னடா? என்றால், உலகம் தோன்றி நின்று ஒடுங்குவது உங்களிடம்தானே, ஆதலால் உங்களைச் சுற்றிவிட்டால் உலகத்தையே சுற்றி விட்டதாகாதோ?' என்று எதிர்க் கேள்வி போடுகிறார் பிள்ளையார். அவ்வளவுதான் : பந்தயத்தில் வெற்றி பெற்று - மாங்கனியையும் பெற்றுக் கொள்கிறார். சுற்றி அலுத்த முருகனோ, விஷயம் அறிந்து தந்தை தாயாரிடம் கோபித்துக் கொண்டு கோவாணாண்டியாகவே புறப்பட்டு விடுகிறான். தாய்தான் `அப்பா! நீயே ஞானப்பழமாக இருக்கும்போது, உனக்கு வேறு பழம் நாங்கள் தரவேண்டுமா என்று சமாதானம் செய்து வைக்கிறார்.

`முப்பழம் நுகரும் மூஷிகவாகனர்' மாம்பழம் பெற்ற கதை இதுதான். அண்ணன் தம்பி போட்டியில், ஆத்திரம் அடைந்த தம்பி தோல்வியுறுவதையும், அவசரப்படாத அண்ணன் வெற்றி பெறுவதையும் காண்கின்றோம். ஆற்றல் இல்லாவிட்டாலும், அறிவாலும் அனுபவத்தாலும் காரியசித்தி பெறலாம்; போட்டியில் வெற்றி பெறலாம் என்பதைத்தானே விளக்குகிறது. கதை.

கதைகளை கதைகள் என்ற அளவில் மட்டும் படிக்காமல், கதை எந்த அடிப்படையில், எந்தத் தத்துவத்தை விளக்க எழுதப்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொள்வோமானால், தெரிந்துகொள்ள முயல்வோமானால் - சமய உலகில் இருக்கும் குழப்பங்கள் தீர்ந்துவிடும். தமிழன் கண்ட கடவுள், ஏதோ ஒரு நாளில், ஒரு வருஷத்தில் உருவானவர் அல்ல. நீண்ட காலமாக கலைஞர்கள் சிந்தித்துச் சிந்தித்து `உள்ளக்கிழியில் உரு எழுதி' அதன்பின் தான் பாக்களில், சித்திரத்தில் சிற்பத்தில் எல்லாம் உருவாக்கி இருக்கிறார்கள். அப்படி உருவானவர்களில் தலை சிறந்தவர்தான் **ஆனைமுகப் பெருமான்**. தமிழ் நாட்டில் மட்டுமல்ல, இந்திய நாடு முழுவதும் ஏன்? கடல் கடந்தும் சென்று மேலை நாடுகளிலும் கீழை நாடுகளிலும் இடம் பெற்றிருக்கிறார் அவர். நாட்டுக்கு நாடு அவர் வேறு வேறு திரு உருவங்களில் அமைந்திருக்கிறார் என்றால் அது அந்த அந்த நாட்டு மக்களின் சிந்தனையிலும், கற்பனையிலும் உருவான தோற்றங்கள்தான். `கற்பனை கற்பித்த கடவுளாம்' கற்பக விநாயகர் அவரவர் தமது தமது அறிவு அறிவு வகை வகை' யாகத்தானே கோலம் கொள்ள முடியும் ; அருள்பாலிக்க இயலும்.

இந்த விநாயக தத்துவத்தைப் பற்றி இன்னும் எவ்வளவோ எழுதலாம். இவ்வளவிலாவது எழுத வாய்ப்புக் கிடைத்ததற்கு மகிழ்கிறேன்.

*பெருவரங்கள் தரும் தேசி விநாயகப்*
*பிள்ளையார் பதம் பணிந்து*
*திருவீங்கைக்குடி மகாதேவர் அவர்*
*திருத்தாள் வணங்கி, மேலும்*
*அருள் மருதங்குடி நாயனார் அவர்தம்*
*அடிமலர்கள் சேவித்து, என்றும்*
*மருள் கடிந்த சிவகாமி யொடுவாடா*
*மலர்மங்கை அருள் கொள்வோமே*

**- சா கணேசன்**

## உலகுக்கெல்லாம் சொந்தமானவர்

*"ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி*
*பீடாதீச்வர ஸ்ரீ சந்திரசேகரேந்திர*
*சரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்*

பிள்ளையார் ஏழை எளியவர்களுக்கெல்லாம் சொந்தமான ஸ்வாமி. மஞ்சள் பொடியிலும், களிமண்ணிலும், சாணியிலும் கூட எவரும் ஒரு பிள்ளையாரைப் பிடித்துப் பூஜை செய்துவிடலாம். அவர் எளிதில் ஸந்தோஷப்படுகிறவர். எங்கே, எப்படி, எதில் கூப்பிட்டாலும் உடனே வந்து அந்தக் கல்லோ, களிமண்ணோ, அதற்குள்ளிலிருந்து கொண்டு அருள் செய்வார். அவரை வழிபட நிறைய சாஸ்திரம் படிக்க வேண்டும் என்பதில்லை. ஒன்றும் படிக்காதவனுக்கும், அவன் கூப்பிட்ட குரலுக்கு வந்துவிடுவார்.

`மற்ற தேவதா விக்கிரஹங்களில் ஸாங்கோபாங்கமாகப் பிராணப் பிரதிஷ்டை என்று பண்ணி, அவற்றில் அந்தந்த தேவதைகளின் ஜீவ கலையை உண்டாக்குவது போல் பிள்ளையாருக்குப் பண்ண வேண்டுமென்பதில்லை. பாவித்த மாத்திரத்தில் எந்த மூர்த்தியிலும் அவர் வந்து விடுகிறார்' என்று சொல்வதுண்டு.

மற்ற ஸ்வாமிகளைத் தரிசனம் செய்வது என்றால், நாம் அதற்காக ஒரு காலம் பார்த்து, குளித்து முழுகி, அர்ச்சனை சாமான்கள் வாங்கிக் கொண்டு கோயிலுக்குப் போக வேண்டியிருக்கிறது. கோயிலுக்குப் போனாலும் நேரே அந்த ஸ்வாமியிடம் போய்விட முடியாது. பிரகாரம் சுற்றிக் கொண்டு உள்ளே போக வேண்டும். அப்போதும் கூட ஸ்வாமிக்கு ரொம்பப் பக்கத்தில் போகக்கூடாது. கொஞ்சம் தள்ளித்தான் நிற்க வேண்டும். பிள்ளையார் இப்படி இல்லை. எந்த சமயமானாலும் சரி, நாம் ஆபீஸுக்கோ, ஸ்கூலுக்கோ, கடைக்கோ போய் வருகிறபோதுகூட, தெருவிலே தற்செயலாகத் தலையைத் தூக்கினால். அங்கே ஒரு முக்கில் பிள்ளையார் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்! அவரைப் பார்த்த மாத்திரத்தில் நாமாக நெற்றியில் குட்டிக் கொண்டு ஒரு தோப்புக்கரணம் போட்டுவிட்டு நடையைக் கட்டுகிறோம். இதிலேயே நமக்குச் சொல்லத் தெரியாத ஒரு நிம்மதி, ஸந்தோஷம் உண்டாகிறது.

அவருக்கு கோயில் என்று இருப்பதே ஓர் அறைதான். அதனால் ஒரு பேதமும் இல்லாமல் யாரும் கிட்டே போய்த் தரிசிக்க முடிகிறது

ஆலயப் பிரவேசச் சட்டம் (Temple Entry Act) முதலான சண்டைகள் இல்லாமல் எல்லோருக்கும் அவர் ஸ்வாதீனம்! பிரகாரங்கள் எல்லாம் தாண்டி உள்ளுக்குள்ளே உட்கார்ந்திருக்கிற ஸ்வாமிகளைவிட, இப்படி எங்கு பார்த்தாலும் நட்ட நடுவில் உட்கார்ந்திருக்கிற பிள்ளையார் தான் தப்பாமல் ஜனங்களை இழுத்துத் தோப்புக் கரணம் வாங்கிக் கொண்டு வருகிறார்!

பிள்ளையார் வழிபாட்டுக்கென்றே சில அம்சங்கள் இருக்கின்றன. சிதறு தேங்காய் போடுவது, நெற்றியில் குட்டிக்கொள்வது,தோப்புக் கரணம் போடுவது ஆகியவை பிள்ளையார் ஒருவருக்கே உரியவை.

பிள்ளையார் சந்நிதியில், இரண்டு கைகளையும் மறித்து நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்ள வேண்டும். இப்படியே இரண்டு கைகளையும் மறித்துக் காதுகளைப் பிடித்துக் கொண்டு, முட்டிக்கால் தரையில் படுகிற மாதிரி தோப்புக் கரணம் போட வேண்டும். இவை எதற்கு என்றால்?

யோக சாஸ்திரம் என்று ஒன்று இருக்கிறது. அதிலே நம் நாடிகளில் ஏற்படுகிற சலனங்களால் எப்படி மனஸையும் நல்லதாக மாற்றிக் கொள்ளலாம் என்று வழி சொல்லியிருக்கிறது. நம் உடம்மைப் பல தினுசாக வளைத்துச் செய்கிற அப்பியாஸங்களால், சுவாஸத்தின் கதியில் உண்டாக்கிக் கொள்கிற மாறுதல்களால் நம் உள்ளம் உயர்வதற்கான வழி அந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்வது, தோப்புக்கரணம் போடுவது இவற்றால் நம் நாடிகளில் சலனம் மாறும்; மனஸில் தெய்வீகமான மாறுதல்கள் உண்டாகும். நம்பிக்கையோடு செய்தால் பலன் தெரியும்.

குழந்தைகளுக்காக நீதி நூல்களைச் செய்த அவ்வையார் பெரியவர்களுக்குக் கூட எளிதில் புரியாத பெரிய யோக தத்துவங்களை வைத்துப் பிள்ளையார் மீதே ஸ்தோத்திரம் செய்திருக்கிறாள். அதற்கு "விநாயகர் அகவல்" என்று பெயர். அளவில் சின்னதுதான் அந்த அகவல் ஸ்தோத்திரம்.

பிள்ளையாரை நினைக்கிறபோது அவ்வையாரையும் நாம் சேர்த்து நினைத்தால் இரட்டிப்பு அநுக்கிரஹம் கிடைக்கும். விநாயகர் அகவலைச் சொன்னால் இரண்டு பேரையும் ஒரே சமயத்தில் நினைத்ததாகும். எல்லோரும் இதைச் செய்ய வேண்டும். வெள்ளிக் கிழமைதோறும் பக்கத்திலுள்ள பிள்ளையார் கோயிலுக்குப் போய் "விநாயகர் அகவல்" சொல்லி விக்நேச்வரனுக்கு அர்ப்பணம் பண்ண வேண்டும்.

பிள்ளையாருக்கு எல்லோரும் சொந்தம். பிள்ளையாரும் எல்லோருக்கும் சொந்தம். ஏழை எளியவருக்கும், சாஸ்திரம் படிக்காத சாமானிய ஜனங்களுக்கும் கூடச் சொந்தம். மற்ற ஸ்வாமிகளின் நைவேத்திய விநியோகத்தில் பெரிய மநுஷ்யர்களுக்குத்தான் முதலிடம். பிள்ளையாரோ தமக்குப் போடுகிற சிதறுகாய் இவர்களுக்குப் போகாமல் ஏழைக் குழந்தைகளுக்கே போகும்படியாக வைத்துக் கொண்டிருக்கிறார்! எல்லோரும் "அகவல் " சொல்லி அவரை வழிபட வேண்டும். பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் இதில் அதிக உரிமை உண்டு. அவ்வை பெண்ணாகப் பிறந்ததால், பெண்கள் எல்லோருக்கும் அவளுடைய இந்த ஸ்தோத்திரதில் பாத்தியதை ஜாஸ்தி. அவள் குழந்தைகளுக்கு உபதேசித்த பாட்டி. விநாயகரும் குழந்தைத் தெய்வம். அதனால் அவளுடைய அகவலைக் குழந்தைகள் யாவரும் அவர்முன் பாடி ஸமர்ப்பிக்க வேண்டும். கொஞ்சம் `கடமுட' என்றிருக்கிறதே. அர்த்தம் புரியவில்லையே என்ற பார்க்க வேண்டாம். அர்த்தம் புரிந்தாலும் புரியாவிட்டாலும் `அவ்வையின் வாக்குக்கே நன்மை செய்கிற சக்தி உண்டு' என்று நம்பி அகவலை பொட்டை நெட்டுருப் போட்டுச் சொன்னாலும் போதும், அதனால் க்ஷேமம் உண்டாகும்.

அழகான பெட்டி ஒன்று கிடைக்கிறது. அதற்குள் நிறைய ரத்தினங்கள் இருக்கின்றன. ஆனாலும் பெட்டியைத் திறக்கச் சாவியைக் காணோம். அதனால் பெட்டி வேண்டாம் என்று விட்டு விடுவோமா? "சாவி கிடைக்கிறபோது கிடைக்கட்டும்" என்று பெட்டியை வைத்துக் கொள்வோம் அல்லவா? இப்போது பெட்டியை விட்டுவிட்டால் பிறகு சாவி கிடைத்தாலும் பிரயோஜனமில்லையே! விநாயகர் அகவல் அப்படிப்பட்ட அழகான பெட்டி. அதற்குள்ளே யோக சாஸ்திர விஷயங்கள் ரத்தினம் மாதிரி உள்ளன. புத்தி (சாவி) இப்போது நம்மிடம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. இப்போதே பிடித்து அதைச் சொல்லிக் கொண்டிருப்போம். சொல்லச் சொல்ல தானே அர்த்தமும் புரிய ஆரம்பிக்கும். பிள்ளையாரே அது புரிவதற்கான அநுக்கிரஹத்தைச் செய்வார்.

பிள்ளையார் எல்லாருக்கும் நல்லவர்; எல்லோருக்கும் வேண்டியவர்; சொந்தம். சிவ சம்பந்தமான லிங்கம். அம்பாள், முருகன் முதலிய விக்கிரஹங்களைப் பெருமாள் கோயிலில் பார்க்க முடியாது. ஆனால், பிள்ளையாரும் சிவகுடும்பத்தை சேர்ந்தவர்தான் என்றாலும், விஷ்ணு ஆலயங்களில்கூடப் பிள்ளையார் மட்டும் இருப்பார். தும்பிக்கை ஆழ்வார் என்று அவருக்குப் பெயர் சொல்லுவார்கள். மதச் சண்டைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் அவர்.

அதனால்தான் புத்தமதம், ஜைனமதம் எல்லாவற்றிலும் கூட அவரை வழிபடுகிறார்கள். தமிழ் நாட்டிலிருப்பது போல் மற்ற ராஜ்யங்களில் தடுக்கி விழுந்த இடமெல்லாம் விநாயகர் இல்லாவிட்டாலும்கூட, பாரத தேசத்திலுள்ள அத்தனை ஸ்தலங்களிலும் ஒரிடத்திலாவது அவர் இருப்பார். "கன்யாகுமரியிலும் பிள்ளையார்; ஹிமயத்தின் கோடியில் கேதாரத்திலும் ஒரு பிள்ளையார்" என்று ஒரு கணபதி பக்தர் என்னிடம் பெருமைப்பட்டுக் கொண்டார்.

நம் தேசத்தில் மட்டும்தான் என்றில்லை. ஜப்பானிலிருந்து மெக்ஸிக்கோ வரை, உலகத்தின் எல்லாத் தேசங்களிலும் விநாயகர் விக்கிரஹம்அகப்படுகிறது! லோகம் பூராவும் உள்ள ஸகல நாடுளிலும் அவரைப் பல தினுசான மூர்த்திகளில் வழிபடுகிறார்கள்.

அப்படி லோகம் முழுவதற்கும் சொந்தமாக இருக்கப்பட்டவரை நாம் எல்லோரும் தவறாமல் ஆராதிக்க வேண்டும்.

**நன்றி - தெய்வத்தின் குரல்**

## விநாயகர் அகவல் (மூலம்)

"சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பல இசை பாடப்
பொன் அரை ஞாணும், பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்து அழகுள றிப்பப்
பேழை வயிறும், பெரும்பாரக் கோடும் 5

வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்,
அஞ்சு கரமும், அங்குச பாசமும்,
நெஞ்சில் குடிகொண்ட நீல மேனியும்,
நான்ற வாயும், நால்இரு புயமும்,
மூன்று கண்ணும், மும்மதச் சுவடும் 10

இரண்டு செவியும், இலங்குபொன் முடியும்,
திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்,
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே! 15

முப்பழம் நுகரும் மூஷிக வாகன!
இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டி
தாயாய் எனக்குத் தான் எழுந்து அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்தே,
திருந்திய முதல் ஐந்தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்துஎன் உளம்தனில் புகுந்து 20

குருவடிவு ஆகிக் குவலயம் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருள் என
வாடா வகைதான் மகிழ்ந்து எனக்கு அருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில் 25

தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி,
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக்கு அருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து,
இருவினை தன்னை அறுத்துஇருள் கடிந்து 30

தலம் ஒரு நான்கும் தந்து எனக்கு அருளி
மலம் ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே,
ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால்,
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி,
ஆறாதாரத்து அங்குச நிலையும் 35

பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே,
இடைபிங் கலையின் எழுத்து அறிவித்துக்
கடையிற் சுழுமுனை கபாலமும் காட்டி,
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக் 40

குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து,
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்து அறிவித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும் 45

குமுத சகாயன் குணத்தையும் கூறி,
இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையும் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முகம் ஆக இனிதெனக்கு அருளிப் 50

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி,
இருத்தி முத்தி இனிதுஎனக் கருளி,
என்னை அறிவித்து, எனக்கருள் செய்து 55

முன்னை வினையின் முதலைக் களைந்தே,
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டுக்கும் ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தி, என் செவியில் 60

எல்லை இல்லா ஆனந்தம் அளித்து,
அல்லல் களைந்தே, அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டி,

சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி,
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்க் 65

கணுமுற்றி நின்ற கரும்பு உள்ளே காட்டி,
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடும்மெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி,
அஞ்ச சக்கரத்தின் அரும்பொருள் தன்னை,
நெஞ்சக் கரத்தின் நிலையறி வித்துத் 70

தத்துவ நிலையைத் தந்துஎனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே!

## பிள்ளையார் தோத்திரப் பாடல்கள்

1. திருமூலர் அருளியது

ஐந்து கரத்தனை, ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை, ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே.

2. கபில தேவர் அருளியவை

திருவாக்கும்,செய்கருமம் கைகூட்டும் ; செஞ்சொல்
பெருவாக்கும் ; பீரும் பெருக்கும் ; உரு ஆக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம் கை.

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் - விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணில் பணிமின் கனிந்து.

3. அதிராவடிகள் அருளியது

மொழியின் மறைமுதலே, முன் நயனத்து ஏறே
கழிய வரு பொருளே, கண்ணே - தெழிய
கலாலயனே, எங்கள் கணபதியே, நின்னை
அல்லாது, ஐயனே, சூழாது என் அன்பு.

4. நம்பியாண்டார் நம்பி அருளியது

என்னை நினைந்தடிமை கொண்டு என் இடர் கெடுத்து
தன்னை நினையத் தருகின்றான், புன்னை
விரசுமகிழ் சோலை வியன் நாரையூர் - முக்கண்
அரசு மகிழ் அத்தி முகத்தான்.

5. பெருந்தேவனார் அருளியது

ஓதவினை அகலும் ; ஓங்கு புகழ் பெருகும்
காதல் பொருள் அனைத்தும் கை கூடும் - சீதப்
பனிக் கோட்டு மால்வரை மேல் பாரதப் போர் தீட்டும்
தனிக் கோட்டு வாரணத்தின் தாள்.

6. அவ்வையார் அருளியவை

வாக்கு உண்டாம் ; நல்ல மனம் உண்டாம் ; மாமலராள்
நோக்கு உண்டாம் ; மேனி நுடங்காது பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

பாலும்,தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்து உனக்கு நான் தருவேன் - கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்கு
சங்கத் தமிழ் மூன்றும் தா!

7. உமாபதி சிவம் அருளியது

வானுலகும் மண்ணுலகும் வாழ,மறை வாழப்
பான்மை தரு செய்ய தமிழ் பார்மிசை விளங்க
ஞானமத, ஐந்து கர, மூன்று விழி நால்வாய்
ஆனைமுகனைப் பரவி அஞ்சலி செய்கிற்பாம்.

8. தேசி விநாயகப் பிள்ளையார் ஒருபா ஒருபது
கம்பன் அடிப் பொடி. சா.கணேசன் அருளியது

1. நன்று புரிராச நாராயணபுரமாம்
குன்றார் மருதங் குடியதனில் - நின்றருளும்
வேத முதல் தேசி விநாயகப் பிள்ளையார்
தீது அகற்றிக் காப்பார் தினம்.

2. செய்ய மருதங்குடி வாழ் தேசி விநாயகரும்
உள்ள நமைக் காத்து அருளும் ஓங்கார - ஐயனையே
அல்லும் பகலும் அனவரதமும் துதிப்போம்
நல்ல வழி காட்ட நமக்கு.

3. ஆனைமுகமும் , அரைப்பதும ஆசனமும்,
பானை வயிறும் படைத்து ஒளிரும் - ஞானத்து
நல் உருவாம் தேசி விநாயகனே தாள் பணிந்தே
எல்லோரும் வாழ்வோம் பணிந்து.

4. ஒற்றை மருப்பு உடையான் ; ஓங்காரப் பேர் உருவான்
முற்றா மதி சூடி ; முக்கண்ணன் - சுற்றும்
அரவு உடையான் ; ஐயாறன் ; ஆனைமுகன்தானே
பரவிடுவோம் நித்தம் பணிந்து.

5. கண்டால் கலிதீரும் ; கைகுவித்தே மெய் வணங்கில்
மண்டும் வினை முழுதும் மாய்ந்தொழியும் - அண்டம்
கருதும் முழு முதலாம் கற்பகத்தை வெற்பார்
மருதங் குடி நகர்க்கே வந்து.

6. அம்மை நீ ; அப்பன் நீ ; அன்புநிறை சுற்றம் நீ
செம்மைசால் நட்பில் சிறந்தோன் நீ - இம்மைஅருள்
செல்வ மொரு கல்வியும் நீ ; தேசி விநாயகனே!
எல்லாமும் நீயே எமக்கு.

7. புத்தி பெற வேண்டுமெனில், புத்திமாற் பத்திமுதல்
சத்தி பெற வேண்டுமெனில், சாகாத - முத்திவரைச்
சித்தி பெற வேண்டுமெனில் தேசி விநாயகனைப்
பத்தி செய வேண்டும் பணிந்து

8. காலனையும் வெல்வோம் ; கடு நரகுக்கு ஆட்படோம்
மேலை வினை இரண்டும் வேர் அறுப்போம்-ஞானம் இதில்
தெள்ளு மருதங்குடி தேசி விநாயகப்
பிள்ளையார் தன்னருளைப் பெற்று.

9. காய,மன,வாக்குஅவையால், காண் ஆதி ஐம்பொறியால்
ஆயும் மதிதான் அறிந்தோ அல்லாதோ - மேயவினை
எத்தனையாம் செய்தோம் எமது குல நாயகனே!
அத்தனையும் உன் அடிக்கே ஆம்.

10. எவை எல்லாம் செய்தோம், எவை எல்லாம் செய்வோம்
அவை எல்லாம் எம் செயல்கள் அல்ல - சிவை பாலா
அத்துணையும் நின் செயலே! அப்பலனும் நினககேதான்
முத்தி அருள் வேழ முகா!

11. பெருவரங்கள் தரும் தேசி விநாயகப்
பிள்ளையார் பாதம் பணிந்து
திருவீங்கைக் குடி மகாதேவர் அவர்
திருத்தாள்கள் வணங்கி, மேலும்
அருள் மருதங் குடி நாயனார் அவர்தம்
அடிமலர்கள் சேவித்து, என்றும்
மருள் கடிந்த சிவகாமியொடு வாடா
மலர் மங்கை அருள் கொள்வோமே!

# பிள்ளையார் பட்டிப் பிள்ளையார்



கற்பக விநாயகர் எனப்படும்

தேசி விநாயகப் பிள்ளையார்



கலைமணி
தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

அமரர் கலைமணி தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் தமிழ் கூறும் நல்லுலகுக்கு நன்கு அறிமுகமானவர். அவரது தமிழ்ப்பணியும், கலைப்பணியும் தமிழக வரலாற்றில் புகழ் அத்தியாயங்கள் என்று ஓர் அன்பர் சொன்னார் - முற்றிலும் உண்மை. தஞ்சாவூரில் அவர் உருவாக்கிய கலைக் கூடமும், தமிழ் மக்களுக்கு அவர் விட்டுச் சென்றிருக்கும் நூல்களுமே அதற்குச் சான்றுகளாகும். குற்றால முனிவர்.ரசிகமணி டி.கே.சியின் பிரதம சீடரான அவர் ஆக்கித் தந்துள்ள இலக்கியப் படைப்புகளும், கலைப்படைப்புக்களும் - தமிழுக்கும் கலையுலகுக்கும் கிடைத்த அரிய பொக்கிஷங்கள்.

## ஆசிரியரின் பிறநூல்கள்

1. வேங்கடம் முதல் குமரி வரை (நான்கு பாகங்கள்)
2. வேங்கடத்துக்கு அப்பால்
3. கலைஞன் கண்ட கடவுள்
4. கல்லும் சொல்லாதோ கவி
5. தென்னாட்டுக் கோயில்களும் தமிழர் பண்பாடும்
6. அமர காதலர்
7. தென்றல் தந்த கவிதை
8. இந்தியக்கலைச் செல்வம் (வானொலிக் கட்டுரைகள்)
9. மதுரை மீனாட்சி
10. தமிழறிஞர் வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார்
11. ஏசிகமணி டி.கே.சி.
12. ஆறுமுகமான பொருள்
13. வேங்கடம் முதல் குமரி வரை (ஐந்தாம் பாகம் - அச்சில்)
14. ஆடும் பெருமானும், அளந்த நெடுமாலும் (அச்சில்)